# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




பியர்ஸ்—அசல் கிளிசரின் சோப்

கனிவான பியர்ஸ் சோப்பினால் காத்திடுவீர் உங்கள் மேனி மெருகை, மாணிக்கப் படிகம்போல் மிளிரும் ஒவ்வொரு வில்லையிலும் ஒரு நூறாண்டு கால சோப்-உற்பத்தி அனுபவம் உள்ளிறங்கியுள்ளது. பிஞ்சு மென்மை கொஞ்சும் பியர்ஸ்—தூய்மைக் கொழுந்து—கண்கூடாக நீங்கள் ஊடுருவிப் பார்க்கக்கூடிய உன்னதத் தூய்மை.

**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**




# கல்கி

1977 பிப்ரவரி 13
நள ௵
மாசி 2




ராஜாஜி சிந்தனை

## தேர்தல் வியாபாரம்!

தேர்தல்கள் என்பது இப்போது ஏராளமான முதலீடு செய்து நடத்தப்படும் தனியார் துறை வியாபாரமாக இருக்கிறது. இது கலப்பற்ற கொடுமை. இந்த முறை மாறி அரசே கட்சிச் சார்பற்ற விதத்தில் பெரும்பாலான பணிகளையும், செலவையும் ஏற்றுச் செயல்பட வேண்டும். இதெல்லாவற்றுக்கும் மேலாகத் தலையாய விஷயம் என்னவெனில் ஆட்சியில் உள்ள அமைச்சர்கள் அனைவரும தேர்தல் தினத்துக்கு ஆறு மாதங்கள் முன்னதாகத் தங்கள் பதவிகளைத் துறந்து ஆட்சிப் பொறுப்பை ராஷ்டிரபதியிடமோ அல்லது மாநில ஆளுனர்களிடமோ ஒப்படைத்து விட வேண்டும். அவர்கள் நிரந்தர அரசு அதிகாரிகள் துணையுடன் ஆட்சி நடத்தவேண்டும். இம்முறையைக் கடைப்பிடித்தால் இப்போது தேர்தல் களத்தில் நடக்கும் பல நாற்றமெடுக்கும் ஊழல்களையும் தொற்றுநோய்களையும் நீக்கிச் சூழலைத் தூய்மைப்படுத்தலாம்.

—சுயராஜ்யா, பிப்ரவரி 10, '62






பஸ் ஒரு தடவை வெலவெலத்துவிட்டு நின்றது.

''யாரய்யா ஒண்டிப்பட்டு இறங்கணும்னுங்க?''

''நான்தான்'' என்றான் செல்வகுமார். வேப்பெண்ணெய், கருவாடு, மற்ற வாசனைகளிலிருந்து விடுதலை கிடைக்கப் போகும் உற்சாகத்தில் ஏழெட்டு சாக்கு மூட்டைகளைத் தாண்டி, நாலைந்து பாதங்களை மிதித்து, 'தக்கா புக்கா' என்று பஸ்ஸை விட்டு இறங்கினான். அவனை உதறிவிட்டுக் கதவைச் சாத்திக்கொண்டு அந்தத் தமிழ் நாட்டுக் கிராமத்தை விட்டுக் கிளம்பி டீஸல் புகை மண்டலத்தில் மறைந்தது பஸ். ஐந்து நிமிஷங்கள் கழித்துத் தன் முகத்திலிருந்து கைக்குட்டையை எடுத்தான் செல்வகுமார். சுற்றிலும் பார்த்தான். தூ...ரத்தில் ஓர் ஆசாமி வயலில் வேலை செய்து கொண்டிருந்தான். சமீபத்திய அறுவடையில் இருபுறமும் பயிர்கள் வீழ்ந்திருந்தன. பரப்பு முழுதும் பெரும்பாலும் மஞ்சளாக இருந்தது. தார் ரோட்டின் பெரும் பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டு நீண்ட சதுரங்களாக நெல் உலர்த்தப்பட்டிருந்தது. ஒரு டூரிங் கொட்டகை தெரிந்தது. அருகில் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி கோவில் ஒன்றுக்குக் கோடி அர்ச்சனைக்கு ரூபாய் கேட்டது. 'தட்டியில் ஒட்டப்பட்ட நோட்டீஸ். ஒரு மாட்டு வண்டி கீச்சுக் குரலில் வந்து கொண்டிருந்தது. மாடுகள் அசை* போட்டுக் கொண்டு இயல்பாக இயங்கி நடந்து கொண்டிருந்தன. வண்டியை ஓட்டிக் கொண்டிருந்த குட்டிப் பையன் ஏறக்குறைய படுத்துக் கொண்டிருந்தான்.

அந்த வண்டி அருகில் வந்ததும், ''தம்பி! ஒண்டிப்பட்டிக்கு எந்த வழியிலே போகணும்?'' என்றான் செல்வகுமார்.

அந்தப் பையன் அவனைப் பார்க்காமலே ''கிழக்காலே போங்க'' என்றான். சூரியன் ஏறக்குறைய உச்சியில் இருக்கும்போது, கிழக்கு எது? மேற்கு எது? செல்வகுமார் சாலையில் நடக்க ஆரம்பித்தான். சற்றுத் தூரம் நடந்ததும் பஞ்சாயத்துக் கல் ஒன்று ''ஒண்டிப்பட்டு முக்கால் பர்லாங்க்'' என்று அம்புக் குறியுடன் காட்டியது. காட்டின திசையில் சாலை எதுவும் தெரியவில்லை. வயலின் வரப்புத்தான் தெரிந்தது. பாண்டை மடக்கிக் கொண்டு இறங்கி நடந்தான். பூட்ஸ் காலுடன் இந்தக் குறுகிய வரப்பில் நடப்பது சிரமமாக இருந்தது. சர்க்கஸ் ஞாபகம் வந்தது. சேற்றில் விழுந்து விடுகிற பயம் இருந்தது. பெரும்பாலும் முதிர்ந்த பயிர் வயல்களின் நடுவே ஒரே பச்சை சதுரத்தில் இரண்டு பெண்கள் குனிந்து வேலை செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் முதுகு பளிச்சிட்டது. செல்வகுமார் அவர்களைக் கடக்கும்போது நிமிர்ந்து அவனைப் பார்த்தார்கள். ஒருத்தியை ஒருத்தி நோக்கிச் சிரித்துக் கொண்டார்கள். உயரமாக இருந்தவள் முகத்தில் சேற்றைக் கழுவினால் அழகாக இருப்பாள் எனத் தோன்றியது. இருவரின் மார்புப் பரிமாணமும் செல்வகுமாருக்குச் சற்றுத் தொண்டையை அடைக்கச் செய்தது.

''மருந்து விக்கிறாக'' என்று அவன் பின் சத்தம் கேட்டது. அவன் அவர்களைப் பார்த்துச் சிரித்தான்; கையாட்டினான். அவர்கள் மறுபடியும் சிரித்துக் கொண்டார்கள். ஒண்டிப்பட்டு எங்கே தொடங்குகிறது என்று சொல்ல முடியாதபடி வயல் சூழ்ந்திருந்தது. பெரிய மரத்தின் நிழலில் தூளிகளில் குழந்தைகள் தொங்கிக் கொண்டிருந்தன. சற்றுப் பெரிய குழந்தைகள் மண்ணில் விளையாடிக் கொண்டிருந்தன. பரட்டைத் தலை... துணியில்லாத உடல். டெட்டானஸ் பற்றி எவ்வளவு படித்திருக்கிறேன்... விழுந்து அடிபட்ட இடத்தில் ஒரு பையன் எச்சிலைத் தொட்டு அதன் மேல் மண்ணைப் பரப்பி ரத்தத்தை மறைத்துக் கொள்ள, செல்வகுமாருக்குச் சிலிர்த்துக் கொண்டது. குழந்தைகள்! எத்தனை குழந்தைகள்...

'தீவிர சாகுபடித் திட்டம்' என்கிற போர்டை ஒட்டிக் குடிசைகள் ஆரம்பித்தன.



ஒரே ஒரு கட்டிடம் மட்டும் சிமெண்டுக் கட்டிடம். அதன் வாயிலில் தேய்ந்து மாய்ந்து போன போர்டு ஒன்று அழுகிய ஆங்கிலத்தில் 'ஒண்டிப்பட்டு ப்ரைமரி ஹெல்த் சென்டர்' என்று அறிவித்தது. வாசலில் வேஷ்டி உலர்த்தியிருந்தது. ஓரத்தில் எருமை மாடு கட்டி நாசம் பண்ணியிருந்தது. ஒரு குழந்தை படியின்மேல் உட்கார்ந்திருக்கச் செல்வகுமாரைக் கண்டதும் ''குட்மார்னிங் ஸார்'' என்று கூறிச் சிரித்தது.

''உள்ளே யார் இருக்காங்க?'' என்றான் செல்வகுமார்.

''நாய்னு'' என்றான் சிறுவன்.

''இதுதானே ஆஸ்பத்திரி?'' என்றான் செல்வகுமார்.

''இல்லே. இது எங்க நாய்னு வீடு. நாய்னு, நாய்னு யாரோ வந்திருக்காங்க'' என்று சிறுவன் கதவைத் திறக்க உள்ளே கூடத்தில் தரையில் அந்த நாய்னு உட்கார்ந்திருக்க ஓர் இளம் பெண் அவருக்கு உடலில் தைலம் தடவிக் கொண்டிருந்தாள். பெண்ணுக்குப் பதின்மூன்று வயதிருக்கும்.

''யார்ரா அது?''

''கொஞ்சம் வெளியிலே வரீங்களா?''

''யாரு சொல்லுங்க. எண்ணெய் வெச்சுக்கிட்டிருக்கேனே, தெரியலேயா?''

''நான்தான் டாக்டர். மெட்ராஸிலேயிருந்து வந்திருக்கேன். இந்த செண்டருக்கு போஸ்டிங் ஆகியிருக்கு.''

''அடடடடா! வாங்க! வாங்க! இதை முன்னாலேயே சொல்லியிருக்கக் கூடாதா? ஏ குட்டி! அப்பாலே போ! ஒரு நிமிஷம் இருங்க டாக்டர் அய்யா! ஒரு நிமிஷத்திலே வந்துடறேன். குட்டி! அய்யா கிட்டே பொட்டியை வாங்கிக்க.''

அந்தப் பெண் அவன் பெட்டியைப் பிடுங்க வந்தாள். ''நீ யாரு?'' என்றான். அந்தப் பெண்ணின் வளர்ச்சியைக் கண்ணியமாக மறைக்கும் உடை இல்லாமல் இருந்ததைச் செல்வகுமார் கவனித்தான். கலைந்த தலை, கம்பளி நூல் பின்னல், கன்னங்கரேல் என்ற முகத்தில் பளிச்சிடும் வெண் பற்கள். எக்ஸிமா! பெட்டியைக் கொடுக்க மறுத்தான். மெதுவாக மெதுவாகக் கிராமம் அங்கே கூட ஆரம்பித்தது. செல்வகுமாருக்கு வியர்த்து விட்டது. எல்லோரும் மெதுவாக அணுகி அவனைச் சூழ்ந்து கொண்டு, அவனையே பார்த்துக் கொண்டு அவனுடன் ஒரு வார்த்தை கூடப் பேசாமல்... அவனைச் சுற்றிலும் முகங்கள், முகங்கள். அன்னிய முகங்கள்... எத்தனை ஜோடிக் கண்கள்.. செல்வகுமாரின் கைகள் நடுங்க ஆரம்பித்தன.

''என்ன பாக்குறீங்க?
நான்தான் புது





தொடர்ந்து சில நாட்கள் டெலிவிஷன் செட்டை உபயோகிக்கப் போவதில்லை என்றால் ஏரியல் தொடர்பையும் எடுத்து விடுவது நல்லது.

- பெஜண்ட்—கே. ஆர்.

டாக்டர். இங்கே போஸ்டிங் ஆகியிருக்குது. உங்களுக்கு எல்லாம் வைத்தியம் செய்ய வந்திருக்கேன்.''

மறுமொழி பதிலே இல்லை. அவனையே பார்த்துக் கொண்டுதான் இருந்தார்கள். செல்வகுமாருக்கு உடலெங்கும் பரபரத்து 'ஜிலீர்' என்ற பயமும் ஏற்பட்டது.

ஓர் இளைஞனைப் பார்த்து, ''ஏம்ப்பா, இங்கே வா. உன் பேர் என்ன?'' என்றான். அந்த இளைஞன் மற்றவர்களைப் பார்த்து, ஒதுங்கிப் பின்வாங்கித் தயங்கி ஓடிப்போனான்.

தூரத்திலிருந்த பெண்கள் கூடச் செல்வகுமாரைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''உள்ளே வாங்க!'' அவசரமாகக் குளித்து விட்டு, உடம்பைத் துடைத்துக் கொண்டு வந்தார் 'நாய்னு'. ''ஏய்! போங்கடா! போங்கடா! என்ன வேடிக்கை! இவர்தான் டாக்டர் அய்யா! அப்புறம் வருவாரு போங்கடா! நீங்க வாங்க உள்ளே!

''என்பேரு சபாபதி. உட்காருங்க!'' உள்ளே படுக்கை, சட்டி பானைகள், ஒரு பிரம்புத் தொட்டில், டிரான்ஸிஸ்டர், ஒரு சைக்கிள்.

''இதுதானே பிரைமரிஹெல்த் சென்டர்?''

''ஆமாங்க!''

''சர்க்கார் கட்டிடம்தானே?''

''ஆமாங்க.''

''இதெல்லாம் என்ன?''

''இதெல்லாம் என்னுதுங்க.''

''இந்தக் குழந்தைகள் எல்லாம்?''

''என்னுதுங்க.''

''இந்தப் பொண்ணு?''

''எடு பிடி வேலைக்கு வெச்சிருக்கேன்!''

''ஆஸ்பத்திரி சாமான்கள் எல்லாம் எங்கே? ஒரு மேஜை, நாற்காலி, மருந்து அலமாரி''

''அதெல்லாம் இன்னும் ஸாங்ஷன் ஆகலைங்க. ஒரே ஒரு பெட்டான் மட்டும் இருக்குதுங்க. ஒரு முக்காலி, நாலைஞ்சு பாட்டிலுங்க....''

''நீங்க யாரு?''

''நான்தான் வி.எம்.முங்க.'' சபாபதியின் கண்களில் சந்தேகம் தெரிந்தது. சபாபதி க்ளெஃப்ட் பாலேட்டுடன் பிறந்திருக்க வேண்டும். அயன் மீசை அதை மறைத்திருந்தது. இடாத்திரமான உடல். பிறத்தியார் சோறு நிறையத் தின்றிருக்க வேண்டும். கையில் இரண்டு மோதிரங்கள்... நாற்பது வயதிருக்கும். தொப்பை பெரிசாக இருந்தது.

''இதுக்கு முன்னாலே இங்கே டாக்டர் வந்ததில்லையா?''

''வந்தாங்க! எல்லோரும் பத்து நாட்கள் பதினைஞ்சு நாட்களுக்கு மேலே இருந்ததில்லைங்க. விட்டுட்டுப் போயி ஒரு வருஷத்துக்கு மேலாச்சு. ஒருத்தரும் வரலீங்க.''

''சபாபதி! இந்த இடத்தைக் காலி பண்ணிக் கொடுக்கிறீங்களா? இங்கே டிஸ்பன்ஸரி ஆரம்பிக்கணும்.''

சபாபதியின் முகம் சட்டென்று மாறியது. அவன் சிரிப்பு நின்று விட்டது. ''நீங்க எத்தனை நாட்கள் இருக்கப் போறீங்க?''

''அதைப்பற்றி அப்புறம் யோசிக்கலாம், முதல்லே இந்த இடத்தைக் காலி பண்ணுங்க.''

உள்ளேயிருந்து இரண்டு குழந்தைகள் ஓடி வந்து சபாபதியின் காலைக் கட்டிக் கொண்டன. ''ஏன்யா, சபாபதி, உங்களுக்கு எத்தனை குழந்தைகள்?''

''அஞ்சுங்க! ஆறாவது இப்பத்தான் ரெண்டாவது சம்சாரம் உண்டாகியிருக்குதுங்க.''

''முதல்லே இந்தக் கட்டிடத்தைக் காலி பண்ணுங்க.''

''இருங்க, இருங்க. பதற்றப்படாதீங்க. இப்படி திடுதிப்புன்னு வந்து காலி பண்ணச் சொன்னா எப்படீங்க? எனக்கும் அவகாசம் வேண்டாமுங்களா? எனக்கு நீங்கதான் புது டாக்டருன்னு எப்படித் தெரியும்? கடுதாசி ஏதாவது வெச்சிருக்கீங்களா? பஞ்சாயத்துக் காரங்களையும் ஒரு வார்த்தை கேட்டுற வேண்டாமா? வாங்க!''

'வாங்க' என்றது ஒரு கிழவரை நோக்கி. அவருக்கு அறுபத்தி ஏழு வயதிருக்கலாம். காட்டராக்டுக்கு ஒரு கண் ஆபரேஷன் ஆகிக் கண்ணாடி வழியாகப் பூதம் காட்டியது.

''தம்பி யாருங்க?''

''டாக்டருங்க.''

''கிராமத்து டாக்டரா?''

''ஆமாங்க.''

''ரொம்ப சந்தோஷம் தம்பி. என் கண்ணைக் கொஞ்சம் பார்த்துடுங்க. ரெண்டு கண்ணும் உறுத்துது. அப்புறம் மாரிலே ஒரு கட்டியாட்டம் புறப்பட்டு அவஸ்தைங்க'' என்று மார்புத் துண்டைக் கழற்ற ஆரம்பித்தார் பெரியவர்.

''இருங்க, இருங்க! வைத்தியம் பார்க்கறதுக்கு இடத்தை முதல்லே செட்டில் பண்ண வேண்டும். உங்க முன்சீப், சர்க்கார் கட்டிடத்திலே உட்கார்ந்துக்கிட்டு இருக்கார், இவர் காலி செய்யணும் முதல்லே!''

''நான் எங்கே போறது, தாத்தா? நீங்களே சொல்லுங்க...''

பெரியவருக்குக் குழப்பமாக இருந்தது. ''என்ன சொல்றீங்க?''

''திடீர்னு வந்து காலி பண்ணச் சொன்னா எப்படிங்க? உங்களுக்கு ஓர் இடம்தானே வேணும்.''

''எனக்கு இந்த இடம் வேண்டும். நீங்க இந்தக் கட்டிடத்திலே தங்கினதே தப்பு. ஆஸ்பத்திரிக் கட்டிடம் இது. உங்களுக்கு வீடு ஏதும் இல்லையா?''

''இருக்குங்க. மேற்காலே பள்ளியத்திலே இருக்குதுங்க.''

''அங்கே போய்க்குங்க. சீக்கிரம் வண்டி கொண்டு வாங்க, சீக்கிரம் காலி பண்ணுங்க!''

''முடியாதுங்க!''

''என்னது!'' செல்வகுமார் அதிர்ந்து விட்டான்.

''முடியாது. நீங்க என்ன வேணா செஞ்சுக்குங்க.''

செல்வகுமார் சபாபதியை ஏற இறங்கப் பார்த்தான். அவன் கண்களில் முதலில் தோன்றிய விசுவாசம் எப்போதோ கழன்று போய் விரோதம்தான் தெரிந்தது. மெதுவாக வீட்டை விட்டு வெளியே வந்தார்கள் இருவரும். ''சபாபதி! சும்மா பைத்தியக்

காரத்தனமாகப் பேசாதீங்க. நான் டவுனுக்குப் போய்ப் புகார் செய்து போலீஸ்காரங்களோட வரணுமிங்கிறீங்களா? இந்த மாதிரி அதாரிட்டி இல்லாம சர்க்கார் கட்டிடத்திலே தங்கறது எல்லாம் ரொம்பத் தப்பு. பேசாம உங்க வீட்டுக்குப்போயிடுங்க.''

''இதுவரைக்கும் மூணு நாலு டாக்டருங்க வந்திருக்காங்க. அவங்க ஒருத்தரும் இந்த மாதிரி நடந்துக்கிட்டதில்லே. எல்லோரும் டவுன்லே அறை எடுத்துக்கிட்டு இருப்பாங்க. வாரம் ஒரு தடவை வருவாங்க. வர சமயத்திலே நான் வசதியா பெஞ்சு, நாற்காலி போட்டுக் கொடுப்பேன். கையைப் புடிச்சும் பார்ப்பாங்க! போவாங்க!''

''சபாபதி, இந்த டாக்டர் அப்படி இல்லே. நான் இங்கேயே இருக்கப் போறேன். இந்த டிஸ்பன்ஸரியைத் தினம் தினம் நடத்தப் போறேன். எனக்கு இந்த இடம் வேண்டும்.''

''அடப் போய்யா ! முடியாதுன்னு ! ஒண்ணு கிடக்க ஒண்ணு சொல்லிக்கிட்டே இருக்கியே. நானும் அப்பலேர்ந்து பார்க்கிறேன். படிச்ச புள்ளயா — சின்னப் புள்ளேயா — இங்கிதம் தெரியாமப் பேசறியே. நான் இவ்வளவு புள்ளேங்களை வெச்சுக்கிட்டு எங்கிட்டுப் போவேன்? ஏங்க! நீங்களே சொல்லுங்களேன். ஏய் நடராசு! நீயும் சொல்லேண்டா!''

''சபாபதி அண்ணே! நீங்க இங்கியே இருங்க. நாங்க கவனிச்சுக்கிறோம்.''

''வாடா வெங்காயம், சப்போட்டுக்கு வந்துட்டியா?''

''சார் யாருன்னு உனக்குத் தெரியாதா?''

''நீங்க இருண்ணே!''

''ஆமா.''

''இருங்க, பயப்படாதீங்க.''

பல குரல்கள் ஆமோதித்தன.

''எனக்கும்தான் சர்க்காரிலே உத்தரவாகி இருக்குது. இந்தக் கட்டிடத்திலே இருந்துக்கிட்டு, வரி வசூல் பண்ணி அங்கங்கே உரம் வாங்க, விதை நெல்லுக வாங்க... கடன் கொடுத்துக்கிட்டு நான்பாட்டுக்கு இருக்கிறேன். கிராமத்துக்குப் பெரிய மனுசனா. திமிர்னு புதுசா வர்றார் டாக்டரு. அரை மணியிலே காலி பண்ணணுமாம்!''

''டாக்டரு எதுக்கு அண்ணே வந்திருக்காரு?''

''உங்களுக்கெல்லாம் ஆப்பரேஷன் பண்ணடா!''

''இல்லே, இல்லே, உங்களுக்கெல்லாம் வைத்தியம் பார்க்கறதுக்கு!'' என்றான் செல்வகுமார். அவனைச் சுற்றி ஒரு வெறுப்புச் சூழ்நிலை உருவாவதை மயிர்க் கால்களில் உணர்ந்தான்.

''அதான் நம்ப நாட்டு வைத்தியரு இருக்கிறாரே, புதுசா எதுக்குடா வைத்தியரு?''

''நீங்க இருங்க சபாபதி! எந்தக் கயவாளிப்பய உங்களை, விரட்டறான்னு பார்த்துடலாம்.''

காட்ராக்ட் பெரியவர் அவனிடம் வந்து ''தம்பி சந்தர்ப்பம் சரியாக இல்லே. நீங்க திரும்பிப் போயிடறது நல்லது'' என்றார்.

செல்வகுமாரின் வயதே உள்ள இளைஞன் வெற்று மார்புடன் அவன் முன் வந்து நின்று ஒருவித அசிங்க நடனம் ஆடினான்.

''மச்சானைப் பார்த்தீங்களா?
மலைவாழைத் தோப்புக்குள்ளே''

ஒருவன் அவன் அருகே வந்து ''ஷேக் ஹாண்ட் துரை!'' என்றான். பெட்டியைப் பிடுங்கப் பார்த்தார்கள். மௌனமுகங்கள்! அன்னிய முகங்கள்! வெறுப்பு முகங்கள்! அவனை நெருங்கி முதலில் தொட்டு அப்புறம் தட்டி..., அப்புறம் தள்ளின. அப்போது அவன் உடல் முழுவதும் அட்ரினலின் பரவிப் பயம் அவனை ஆக்கிரமித்துக் கொள்ள —

செல்வகுமார் அந்தக் கிராமத்தை விட்டுத் தப்பித்து ஓட ஆரம்பித்தான். வேர்த்து, இரைத்து, முள்குத்தி, ரத்தம் கசிந்து .... ஓர் எல்லைக்கப்புறம் அவர்கள் அவனைத் துரத்தவில்லை.

பஸ்ஸில் டவுனுக்குத் திரும்பிக் கொண்டிருந்தபோது, 'என்ன ஓர் அறியாமை! என்ன ஒரு மடமை! நான் எப்படி இவைகளை எல்லாம் வெல்லப் போகிறேன்? நாம் ஆரம்பித்ததே தப்பு. என் அணுகலே தப்பு. முதலில் அவர்களைச் சிநேகத்துடன் அணுகியிருக்க வேண்டும். இப்போது என்ன செய்யப் போகிறேன்? மறுபடியும் அந்தக் கிராமத்திற்கு எப்படி செல்லப் போகிறேன்? அந்த அக்கிரமக்காரனை எப்படி விலக்கப்போகிறேன்? போலீஸ் உதவியுடனா? தனியாகவா? என்ன செய்யப் போகிறேன்?' என்றெல்லாம் எண்ணினான்.

செல்வகுமாரின் பையில் அந்தக் கடிதம் உறுத்தியது. அதை எடுத்தான்.

''அன்புள்ள செல்வகுமாருக்கு, அப்பா அனேக ஆசீர்வாதங்கள். நலம். நலமறிய அவா. இப்பவும் உன் போஸ்டிங் விஷயமாக நான் டைரக்டர் ஆபீசில் விசாரித்தேன். அங்கே என் நண்பர் பார்த்தசாரதிக்குப் பெரிய உத்தியோகத்தில் இருக்கும் நபர் ஒருவரைத் தெரியுமாதலால் அவர் உன்னை உடனே ஒரு மனுச் செய்யுமாறு சொன்னார். உன் குடும்ப நிலை காரணமாக உடனே போஸ்டிங் மாற்றிச் செங்கல்பட்டு அல்லது சென்னையில் போட்டு விடும்படி கேட்டுக் கொண்டு டைரக்டர் ஆஃப் மெடிக்கல் சர்வீஸுக்கு நேராக மனுச் செய்து எனக்கு நகல் அனுப்பி விடவும். இரண்டு வாரங்களில் வேறு இடத்துக்கு உத்தரவு வாங்கித் தருகிறேன் என்று நிச்சயம் சொல்லியிருக்கிறார். உடனே செய்யவும். உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளவும்.

உடனே பதில்.

அன்புள்ள அப்பா

பஸ் ஆடி ஆடிச் செல்லச் செல்வகுமார் அந்தக் கடிதத்துக்குத் தான் எழுதப் போகும் பதிலை மெதுவாக உருவாக்கிக் கொண்டான்:

அப்பாவுக்கு,

உங்கள் கடிதம், இடம் மாற்றத்துக்கு மனுச் செய்ய உத்தேசமில்லை. ராஜினாமாச் செய்வதாகவும் உத்தேசமில்லை. இங்கேயே நிறைய வேலை இருக்கிறது. — செல்வா

---

**ஒட்டகங்கள் பல நாட்கள் தொடர்ந்து தண்ணீர் குடிக்காமல் இருக்கலாம். காரணம், அவைகளுக்கு வியர்ப்பதே கிடையாது.**

**— பேஜண்ட்–பாலி**



# இதோ! நீங்கள் துடிதுடிப்புடனும், ஊக்கத்துடனும் விளங்க சக்தியளிக்கும் 'எரிபொருள்'




# பூஸ்ட்

## மால்ட் சாக்லெட் மில்க் ட்ரிங்க்

ரயிலுக்கு எரிபொருள் தேவைப்படுவது போன்றே, உங்களுக்கும் நீங்கள் ஒவ்வொரு தினத்தையும் சுறுசுறுப்புடன் தொடங்கவும், நாள் முழுவதும், சிறக்க நல்ல வேகத்துடன் செயலாற்றவும், ஒரு சக்தியளிக்கும் 'எரிபொருள்' தேவை. இதற்கு, நீங்கள் தினமும் காலையில் பூஸ்ட் பருக வேண்டியது அவசியம். முக்கியமாக பள்ளி வேலையிலும், விளையாட்டிலும் அதிக சக்தியை செலவழிக்கும் உங்கள் குழந்தைகளுக்கு பூஸ்ட் அவசியம் அளியுங்கள்.

பூஸ்ட் ஒரு புதிய, மால்ட், சாக்லெட், பால் சேர்ந்துள்ள பானம்.

உடலுக்குத் தேவையான போஷாக்கினைப் பற்றி அனைத்தையும் அறிந்துள்ள 'ஹார்லிக்ஸ்' தயாரிப்பாளர்கள் அளிப்பது.

பூஸ்ட், முழு ஆடைப்பால், கோதுமை, பார்லி மால்ட், கோகோ மற்றும் இயற்கையான வைட்டமின்கள், கனிஜச் சத்துக்கள் முதலியவற்றிலிருந்து தயாரிக்கப்படுகிறது.

மற்ற எந்த சாக்லெட் பானத்தையும்விட பூஸ்ட்டில் அதிக அளவு பால் சேர்க்கப்பட்டுள்ளது. பூஸ்ட்டில் உள்ள அதிக அளவு பால், உங்கள் குழந்தைகளுக்கு அதிக போஷாக்கினையும், அதிக அளவு புரதச்சத்துக்களையும் அளித்து, அவர்கள் வளர்ச்சிக்கு உதவுகிறது.
பூஸ்ட்டில் உள்ள அதிக அளவு பாலினை, பூஸ்ட் பானத்தை அருந்தும் போது நீங்களே உணரலாம்.

பூஸ்ட்டின் மால்ட், சாக்லெட் கலந்த தீஞ்சுவையை உங்கள் குடும்பத்தினர் அனைவரும் விரும்புவர்.

பூஸ்ட், உங்களுடைய ஒவ்வொரு தினத்தையும் துடிதுடிப்பான முறையில் தொடங்குவதற்கு ஒரு அருமையான பானம்.

**'ஹார்லிக்ஸ்' தயாரிப்பாளர்கள் அளிப்பது**

# ஜெகஜீவன்ராம் ராஜினாமா

ஆசார்ய கிருபளானி

மந்திரி சபையிலிருந்தும் காங்கிரஸ் கட்சியிலிருந்தும் ராஜினாமா செய்வது என்று ஜெகஜீவன் ராமும் மற்ற நண்பர்களும் மேற்கொண்டுள்ள முடிவு பற்றி மகிழ்ச்சி அடைகிறேன். 'அப்பாடா' என்று தேசமே ஆறுதல் பெருமூச்சு விடும்.

ஜெகஜீவன் ராமும் , அவருடைய நண்பர்களும் வெளியிட்டிருக்கும் அறிக்கையில் தரப்பட்டுள்ள விஷயங்கள் பொதுமக்கள் நன்கு அறிந்ததே. முன்பு தணிக்கை இருந்ததால் அவற்றைப் பற்றி எந்தப் பத்திரிகையும் யாருடைய அபிப்பிராயத்தையும் பிரசுரித்திருக்க முடியாது.

அரசு எடுத்த எல்லா முடிவுகளுடனும் ஜெகஜீவன்ராம் தொடர்புகொண்டிருந்தார் என்று பிரதமர் கூறுகிறார். ஆகவே இப்போது அவர் அரசின் நடவடிக்கைகள் தவறு என்று கூறி ராஜினாமா செய்வது எப்படிப் பொருந்தும்?— இதுதான் பலருக்கு எழுந்துள்ள சந்தேகம்.

கல்கி மலர் 36 இதழ் 29



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

ஓர் அமைச்சர் தம்முடைய பதவிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளு முன்பு ரகசியப் பிரமாணம் எடுத்துக்கொள்ள வேண்டும். பதவியிலுள்ளபோது அவர் பிரமாணத்தை மீற முடியாது. தாம் ராஜினாமா செய்த பிறகு கூட அவர் அவ்வாறு செய்ய முடியாது. அவர் ராஜினாமா ஏற்றுக் கொள்ளப்பட்ட பிறகேதான் அவ்வாறு செய்ய முடியும். ராஜினாமா ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு முன்னதாகத் தம்முடைய குறைகளை அவை என்னவாக இருந்தாலும் வெளிப்படுத்த முடியாது.

ஒரு மந்திரி ராஜினாமா செய்கிறார் என்றால் குறிப்பிட்ட ஒரு சம்பவத்தினால் மட்டும் அவ்வாறு செய்வதில்லை. தங்களுக்கு விருப்பமில்லாது அவ்வப்போது எடுக்கப்படும் முடிவுகள் காரணமாக ராஜினாமா செய்கின்றனர். தாங்கள் ராஜினாமா செய்வதற்கான எல்லாக் காரணங்களையும் விளக்கிப் பார்லிமெண்டில் அறிக்கை வெளியிடும் உரிமையை உபயோகித்து அறிக்கை விடுகின்றனர்.

இப்போது நாடாளு மன்றம் கலைக்கப்பட்டு விட்டதால் தம்முடைய ராஜினாமாவுக்கான மொத்தக் காரணங்களைப் பொதுமக்கள் முன்பு தெரிவிப்பதைத் தவிர வேறு வழியில்லை ஜெகஜீவன்ராமுக்கு.

வேறு பல காங்கிரஸ் அங்கத்தினர்களும் ஸ்தாபனத்தை விட்டு வெளியேறுவதாலும் ஜெகஜீவன்ராம் போன்ற மனோநிலையிலேயே அவர்களும் இருப்பதாலும் ஒரு கூட்டு அறிக்கை வெளியிடுவது அவசியமாயிற்று.

நிர்வாகத்திலோ அல்லது மந்திரி சபையிலோ பெரும்பான்மையினருடன் சிறிது கருத்து வேற்றுமைக்காக உயர் பதவியில் உள்ளவர்கள் ராஜிநாமாச் செய்துவிடுவதில்லை. உயர் பதவியில் உள்ளவர்கள் தங்கள் ராஜிநாமாக்களைச் சமர்ப்பிக்கும் முன்பு பல காரணங்களை யோசித்துப் பார்க்க வேண்டியிருக்கும். தேசியக் காரணங்கள், கட்சிக் காரணங்கள், தாங்கள் நீண்ட காலமாகச் சேர்ந்து வேலை செய்து வந்தவர்களுடன் உள்ள நட்பு அல்லது சொந்தக் காரணங்கள் கூட இருக்கும்.

மேலும் மந்திரி சபையில் கூட்டுப் பொறுப்பு உண்டு; அதாவது மந்திரி சபையில் உள்ள ஒவ்வொருவரும் கருத்து வேற்றுமை ஏற்பட்டவுடன் ராஜிநாமாச் செய்யத் தயாராயிருந்தால் ஒழிய அவர் மந்திரி சபையில் செய்யப்படும் முடிவை ஒப்புக்கொண்டு அதற்காக வேலை செய்வார் என்பது அர்த்தமாகும். பெரும்பான்மையினரின் முடிவுகளுடன் கருத்து வேற்றுமை ஏற்படும்போதெல்லாம் ஓர் அமைச்சர் ராஜிநாமாச் செய்தால் அரசை நடத்துவது சாத்தியமாயிராது. அது பொது மக்கள் மனத்தில் அரசின் கொள்கைகள் பற்றி நிச்சயமற்ற நிலையைத் தோற்றுவிக்கும்.

கூட்டுப் பொறுப்பு உள்ள மந்திரி சபையில் யார் யார் மெஜாரிட்டி முடிவுடன் மாறுபடுகிறார்கள் என்பதைத்

தெரிந்து கொள்வது சாத்தியமல்ல. மந்திரி சபைக் கூட்டங்கள் ரகசியமானவை. இவை பற்றி விவரமான நடவடிக்கைக் குறிப்புக்கள் வைக்கப்பட்டிருக்கின்றனவா என்பது எனக்குத் தெரியாது. இவை பொது மக்களுக்குக் கிடைக்கா விட்டாலும், பழைய தஸ்தாவேஜுகள் வைக்கப்படும் ஆவணக் காப்பகங்களில் இருக்கலாம். வரலாற்றுக் காரணங்களுக்காகச் சில ஆராய்ச்சியாளர்கள் எதிர்காலத்தில் இவற்றைத் தேடிப் பார்க்கக்கூடும்.

பல்வேறு மாநிலங்களின் காங்கிரஸ் முதலமைச்சர்கள் அனைவரும் அவசரம் அவசரமாகப் பிரதம மந்திரியிடம் தங்கள் விசுவாசத்தையும் ஆதரவையும் தெரிவித்துள்ளதில் வியப்பதற்கு ஏதுமில்லை.

காங்கிரஸை விட்டு வெளியேறிய ஜெகஜீவன் ராமும், அவருடைய மற்ற நண்பர்களும் எழுப்பியுள்ள பிரச்னைகள் மீது ராஜினாமாச் செய்யத் தயாராக இருந்தாலொழிய அவர்கள் வேறு எப்படி நடந்து கொள்ள முடியும்?

# கன்னாவின் 'பதவி மூப்'பைப் புறக்கணித்தது தவறு

## என். ஏ. பால்கிவாலா

**1973**ல் சுப்ரீம் கோர்ட் கேசவானந்த பாரதி வழக்கில் தீர்ப்பு வழங்கியபோது அரசியல் அமைப்பைத் திருத்தும்போது அடிப்படைப் பிரஜா உரிமை ஷரத்துக்களைத் திருத்தலாம் என்றும் ஆனால் அரசியல் அமைப்பின் ஆதார அமைப்பினை, கட்டுக்கோப்பினை மாற்றக்கூடாதென்றும் தீர்ப்பு வழங்கின நீதிபதிகள் ஏழு பேர்.

அந்த ஏழுபேரில் ஒருவர் காலமாகிவிட்டார், இருவர் ஓய்வு பெற்றனர், மூவர் பிரதம நீதிபதி நியமன விஷயத்தில் இது வரை இருந்து வந்த ஸீனியாரிடி — பதவி மூப்பு — முறை கைவிடப்பட்டது காரணமாகப் பதவியை ராஜினாமாச் செய்தனர்.

ஏழுபேரில் மீதம் நீதிபதி எச். ஆர். கன்னா. அவர்தான் ஜனவரி 28ந் தேதியன்று இருந்தவர்களில் மற்றெல்லா நீதிபதிகளுக்கும் முன்னராக நியமிக்கப்பட்டவர். ஆனால் அவர் பிரதம நீதிபதியாக்கப்படவில்லை. அவர் அன்றே ராஜினாமா செய்தார்.

இன்னும் ஐந்து மாதத்தில் அவரது ஓய்வுத் தேதி வந்துவிடுகிறது என்பதே பதவி மூப்பு—ஸீனியாரிடி—பொருட்படுத்தப்படாததற்குக் காரணம் என்று சர்க்கார் தரப்பில் சொல்லப்படுகிறது.

பிரதம நீதிபதிகளில் மிகவும் சிறந்தவராக விளங்கியவர் நீதிபதி ஜே. ஸி. ஷா. அவர் விஷயத்தில் அவரது பதவி காலத்தில் மிச்சம் ஒன்றரை மாதமே இருந்த நிலையிலும் அவர் பிரதம நீதிபதி பதவிக்கு உயர்த்தப்படவில்லையா?

நீதிமன்றத்து நேர்மை, நீதி வழங்குவதில் சுதந்திரம், உறுதி ஆகிய அம்சங்களில் திரு கன்னாவின் சிறப்பு ஹேபியஸ் கார்ப்பஸ் வழக்கில் அவர் வழங்கிய தீர்ப்பிலிருந்து அறியத் தக்கதாகும். ஐந்து நீதிபதிகள் அமர்ந்த அந்த நீதிபதிக் குழுவில் அவர் தனித் தீர்ப்பு எழுதினார்.

அதில் ஒரு வாசகம் பின்வருமாறு:

''ஒருவரை விசாரணையின்றிக் காவலில் வைப்பது என்பது மனித சுதந்திரத்தில் பற்றுதலும் மரியாதையும் உள்ள எவருக்கும் அருவருப்புணர்ச்சியையே ஊட்டும் ஒரு செயலாகும்.

''அடிப்படை ஜீவாதார உரிமைகள் என்று அரசியல் அமைப்பில் எதுவுமே பொறிக்கப்படாதிருந்தால் கூட, சட்டத்தின் சம்மதமின்றிச் சட்டத்தின்படியுள்ள அதிகாரத்துக்குப் புறம்பாக ஒருவனது உயிரையோ உடல் சுதந்திரத்தையோ பறிக்க அரசுக்கு அதிகாரம் கிடையாது.''

அவரது தீர்ப்பில் சொன்ன கருத்துக்கள் நாட்டின் சட்டமாக இயங்கும் காலம் விரை


பசு நல்லா தான் இருக்குது..
கன்னுக் குட்டியை
கொன்னுட்டீங்களே!
பருவா
ஜனநாயகம்
காங்கிரஸ்
ஜகஜீவன்ராம்
நாட்டில் மட்டுமல்ல, காங்கிரஸ் கட்சியிலும்
ஜனநாயகம் இல்லை என்று ஜகஜீவன்ராம் கூறுகிறார்.


காங்கிரஸ்
பவன்
போடு போங்கய்யா...
தனி நபர்களை
நம்பியா
காங்கிரஸ்
இருக்குது?
காங்கிரஸ்
ஜக
ஜீவன்ராம்


இந்திராஜி! நாட்டையும்
கட்சியையும் காப்பாற்ற
உங்களை விட்டால்
வேறு கதி இல்லை!
காங்கிரஸ்


நீதித்துறை
சுதந்திரம்
கோகலே


அதை விட இந்தக் குல்லா
நல்லா இருக்குதே!
Zuma.

வில் வரட்டும் என்பதை விட உயர்ந்த பிரார்த்தனை தேச பக்தர்கள் மனத்தில் இருக்க முடியாது.

எந்த நிமிஷத்தில் நீதி மன்ற அமைப்பு நிர்வாக சர்க்காரின் இஷ்டத்துக்கும் பதவியி லுள்ள கட்சியின் விருப்பு வெறுப்புக்களுக்கும் மசியக் கூடியதாக ஆகிறதோ அந்த நிமிஷத்தி லிருந்து அரசியலமைப்பில் பொறிக்கப்பட் டுள்ள எந்த அடிப்படை உரிமையும் குடி மகனுக்குப் பயன்படாது போய்விடும். அந்த நிலைமையில் கோர்ட்டுக் கட்டடம் நீதியின் கோயில் என்ற நிலைமை மாறி நிர்வாக அரசின் கொலு மண்டபம் என்று ஆகிவிடக் கூடும்.

ஹெபியஸ் கார்ப்பஸ் வழக்கில் அவர் எழு தின தனித் தீர்ப்புப் பற்றி எழுதிய 'நியூ யார்க் டைம்ஸ்', ''ஒவ்வொரு இந்திய நகரத்திலேயும் அவரது உருவச் சிலை அலங் கரிக்க வேண்டும்'' என்று எழுதியது.

உண்மையில் அவரது பெருமைக்குரிய சின்னமாக விளங்குவது தனிமனிதன் சுதந் திரங்களை வலியுறுத்தியும் அரசியல் சாசனத்தின் அடிப்படைக் கட்டுக்கோப்பை மாற்றலாகாது என்று வற்புறுத்தியும் அவர் எழுதிய தீர்ப்புக்களேயாகும்.

நன்றி: தினமணி

# ஷண்முகசுந்தரம் மறைவு

**எ**ழுத்தாளர் ஆர். ஷண்முகசுந்தரம் அண்மையில் தமது அறுபதாவது வயதில் காலமானார் என்பதை அறிந்து மிகவும் வருந்துகிறோம்.

திரு ஷண்முகசுந்தரம் தலைசிறந்த நாவ லாசிரியர். ''நாகம்மா'', ''பூவும் பிஞ்சும்'', ''பனித்துளி'', ''சட்டி சுட்டது'', ''அறு வடை'' மற்றும் இருபதுக்கு மேற்பட்ட இலக் கியத்தரமான நாவல்களைப் படைத்த ஷண் முகசுந்தரம் கொங்கு நாட்டு மண்ணின் மணத்தினையும் தனிச் சுவையையும் இலக் கியமாக வடிப்பதில் வல்லவர் என்று இணை யற்ற புகழைப் பெற்றவர்.

நூற்றுக் கணக்கான இந்தி நாவல்களையும் அவர் தமிழ்ப்படுத்தியவர்.

'வசந்தம்' பத்திரிகையை ஆரம்பித்து நீண்டகாலம் நடத்திய அவர், ''சமுதாயம்'' தினசரிப் பத்திரிகையில் ''ஆலோலம்'' என்ற புனைபெயரில் அரசியல் விமரிசனமும் எழுதி வந்தார்.

தமிழ் எழுத்துலகில் எவரும் மரியாதை செலுத்தி வந்த ஷண்முகசுந்தரம் தம் மனைவி வள்ளியம்மாளையும் ஏராளமான ரசிகர்களை யும் துக்கத்தில் ஆழ்த்திவிட்டு மறைந்து விட்டார்.

# தோல்வியிலும் ஒரு வெற்றி!

**'வா**லையின் மர்மம்' மறுபடியும் தலை யெடுத்திருக்கிறது. நாம் மறந்து மன்னிக்கத் தயாராகுலும் பிரிட்டிஷ் பத்திரிகைகள் விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டு பிய்த்து உதறுகின்றன.

அந்தத் தலைகுனிவு போதாதென்று பங்க ளூர் டெஸ்டில் வேறு இங்கிலாந்து தோற்று விட்டது.

மூன்று டெஸ்ட்களில் சேர்ந்த மாதிரி தோற்று ரப்பரை இழந்த இந்தியா சோர் வுற்று மயங்காமல் இந்த டெஸ்டில் போராடி வென்றது பெரிய சாதனைதான்.

கடைசி நாளன்று இங்கிலாந்து ரன்களைக் குவித்த வேகத்தை இந்தியா முயன்று கட்டுப் படுத்தியிருக்கலாம் என்ற ஒரு குறை இருந்த போதிலும், பாட்டிங், போலிங், ஃபீல்டிங் ஆகிய மூன்று துறைகளிலும் இந்திய கிரிக் கெட் அணியினர் சிறப்பாக இயங்கினர்.

படத்தில் உலக ரிகார்டுக்கு இணையாக இந்த டெஸ்ட்டில் ஏழு 'காட்ச்'களைப் பிடித்த யஜுர்விந்திர சிங் (வலது) காட்ச் பிடித்து ஃபிளெட்சரை அவுட்டாக்கிய உற் சாகத்தில் காணப்படுகிறார். பந்தைப் பிடித்த பின் உயரே தூக்கிப் போட்டிருக்கிறார்.



# "ஆறுகால்" ஸ்தோத்திரம்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசாரிய சுவாமிகள்




கீதையில் கிருஷ்ண பரமாத்மா இப்படிச் சொல்கிறார்:

**சதுர்விதா பஜந்தே மாம் ஜநா:**
**ஸுக்ருதிந: அர்ஜுந அர்த்தார்த்தீ।**
**ஆர்த்தோ ஜிக்ஞாஸு:**
**ஞானீ ச பரதர்ஷப॥**

'என்னை நாலு தினுசான (சதுர்விதமான) ஜனங்கள் பஜிக்கிறார்கள். அதாவது வழிபடுகிறார்கள். யார் யார் இந்த நாலு வகைக்காரர்கள்? ஒன்று ஆர்த்தன், இரண்டாவது ஜிக்ஞாஸு, மூன்றாவது அர்த்தார்த்தி, நாலாவது ஞானி' என்கிறார்.

முதலில் சொன்ன 'ஆர்த்த' என்பதற்கு 'கஷ்டப்படுகிறவன்', 'துக்கமுற்றவன்' என்று அர்த்தம். மனக் கஷ்டம், சரீரக் கஷ்டம் இவற்றுக்கு ஆளானவன் ஆர்த்தன். வியாதி, வலி, தாரித்திரியம் (வறுமை), மானாத கஷ்டங்கள், பிரச்னைகள், மனக்லேசம் தருகிற உபத்திரவங்கள் இவை எல்லாம் ஆர்த்தியில் அடக்கம். இந்தக் கஷ்டம் – துக்க பாரம், துயரச் சுமை – தீருவதற்காக இவர்கள் பகவானை வழிபடுகிறார்கள். ''அப்பா, இந்த பாரத்தை இறக்கி வையப்பா'' என்று பிரார்த்தனை பண்ணுகிறார்கள்.

பக்தர்களில் இரண்டாவது வகை (Category) யார் என்றால், ஜிக்ஞாஸு, அதாவது ஞானம் அடைய விரும்பிச் சாதனை செய்கிற ஸாதகன். பகவான்தான் ஞான விதை போட வேண்டுமாதலால், ஞானம்பான்தான் ஞானப்பால் கொடுப்பானாதலால், இவன் பகவானை வழிபடுகிறான். ஆர்த்தன் மாதிரி இவன் 'ஞானம் தா, ஞானம் தா' என்று ஒன்றை வேண்டிப் பிரார்த்தனை பண்ணினாலும் பண்ணுவான்; அல்லது இப்படிக் கேட்காமல், பகவானின் திவ்ய ரூபத்தையும், கல்யாண குணத்தையும் வெறுமனே தியானம் பண்ணிக்கொண்டே இருப்பான். அதுவே ஆனந்தமாக இருப்பதோடு, இவனுடைய சித்தம் சிதறிப் போகாமல் இழுத்துக் கட்டி ஒருமுகப்படுத்தும். ஆசாரியாளும் இந்த சித்த ஏகாக்ரியத்துக்காகத்தான் உபாஸனையைச் சொன்னார். இவன் 'ஞானம் தா' என்று கேட்கவே வேண்டாம். பகவானைத் தியானம் பண்ணிக் கொண்டு சந்தோஷமாக இருந்தாலே போதும். இவனுடைய சித்தம் ஒருமுகப்பட்டு, தானே அந்த பகவானின் நிர்குணமான, அரூபமான சத்ய நிலையில் இவனை இரண்டறக் கரைத்து விடும். அப்படி, ஜீவாத்மா என்று கொஞ்சம் கூடத் தனியாகப் பிரிந்திருக்காமல் ஸத்ய வஸ்துவோடு ஐக்கியமாய் இருப்பதுதான் ஞானம். அந்த நிலையிலே பூஜையும் இல்லை, தியானமும் இல்லை. ஆனால் அந்த ஸ்டேஜுக்குப் போவதற்காகவே முதலில் இந்த ஜிக்ஞாஸு பகவானை பஜிக்கிறான்.

மூன்றாவதாக அர்த்தார்த்தி. முதலில் சொன்ன 'ஆர்த்தி'யில் வருகிற 'தி' வேறு; இங்கே அர்த்தார்த்தியில் சொல்கிற 'தி' வேறு. ஸம்ஸ்கிருதத்தில் 'க' வர்க்கம், 'ச' வர்க்கம், 'ட' வர்க்கம், 'த' வர்க்கம், 'ப' வர்க்கம் இவற்றில் ஒவ்வொன்றிலும் நாலு விதமான சப்தங்கள் உண்டு. 'க'வை எடுத்துக் கொண்டால் முதலில் **Ka**; அப்புறம் அதையே அழுத்தி **Kha**; மூன்றாவதாக **Ga** கங்கை என்பதில் வருகிற மாதிரி; நாலாவதாக இதையும் அழுத்தி **Gha**. இப்படியே ச, ட, த, ப – விலும் நன்னாலு உண்டு. 'த'வில் முதல் சப்தம் **Ta** தான் 'ஆர்த்தி'யில் வந்தது. அர்த்தார்த்தி என்பதில் வருகிற 'த'வும் 'தி'யும் இரண்டாவது 'த' **Tha**. 'அர்த்தார்த்தி' என்றால் 'பொருளை இச்சிக்கிறவன்' என்று அர்த்தம். அர்த்தம் என்றால் பொருள். அதாவது பணம். அர்த்தி என்றால் அதை வேண்டுகிறவன். முதலில் துன்புற்றவனைச் சொன்னாரே, அதிலேயே பொருள் இல்லாமல் கஷ்டப்படுகிறவனும் அடக்கம்தான். அதனால் இங்கே பிரித்துச் சொல்லியிருக்கிற அர்த்தார்த்தி என்பவன் வறுமையால் கஷ்டப்படுகிறவன் அல்ல, வாழ்க்கை நடத்தவே முடியாமல் இவன் சிரமப்படவில்லை. ஆனாலும் இது போதாது. இன்னும் நிறைய சுபிட்சம் வேண்டும் என்று பகவானைப் பிரார்த்தனை பண்ணுகிறான். நம்மில் ரொம்பப் பேர் இப்படித்தான் இருக்கிறோம். காலக்ஷேபம் நடக்க நமக்குச் சிரமமில்லைதான். இருந்தாலும் இன்னும் நிறைய சௌகரியம் வேண்டும், வீடு வேண்டும், கார் வேண்டும் என்று ஆசை இருக்கத்தான் செய்கிறது. ஸப்-கலெக்டர், கலெக்டராகப் பிரமோஷன் கிடைக்க வேண்டும் என்று பிரார்த்தனை பண்ணுகிறார். கலெக்டர் மாகாணம் பூராவுக்கும் ஏதாவது ஓர் அதிகாரியாக வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறார். 'அர்த்தம்'

---

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**

என்றதில் பணம் மட்டுமில்லாமல் பதவி, கௌரவம், புகழ் எல்லாவற்றையுமே சேர்த்துக் கொள்ளலாம்.

நாலாவதாக ஞானியைச் சொன்னார். ஞானியும் தன்னை பஜிப்பதாக (பஜந்தே மாம்) சொல்கிறார். சற்று முன்னாடிதான் சொன்னேன், ஞானியாகி விட்டால் அப்புறம் பகவான், பக்தன் என்ற வித்தியாசமேயில்லாமல் பரமார்த்த ஸத்தியமான ஒரே ஏகத்தில் இவன் கரைந்து அங்கே பூஜை, தியானம் எல்லாம் நின்று போய் விடுகிறது என்று. இங்கே இப்படி ஞானியும் பக்தி பண்ணுவதாக பகவானை quote பண்ணுகிறேனே (மேற்கோள்காட்டுகிறேனே) என்றால்: ஞான சமாதி நிலையில் பகவானுக்கு வேறாக பக்தன் இல்லைதான். ஆனால் ஞானி எப்போதுமே இப்படி லோகப் பிரக்ஞை இல்லாமல் நிர்விகல்ப ஸமாதியில் இருப்பதில்லை. அவனுக்கு வெளி உணர்வு இருக்கிற—அல்லது இருக்கிற மாதிரி வெளி உலகத்துக்குத் தோன்றுகிற சமயங்களும் உண்டு. அப்படிப்பட்ட சமயங்களில், சமாதி நிலையில் எந்த நிர்குண நிராகார (குணமும் உருவமும் இல்லாத) ஸத்திய வஸ்துவோடு இரண்டறக் கலந்திருந்தானோ, அதே வஸ்து லீலா நிமித்தமாகப் பல குணங்களோடு, ரூபங்களோடு லோக நிர்வாகம் பண்ணுகிறதை ஞானியானவன் ரஸிக்கிறான். 'வாஸுதேவஸ் ஸர்வமிதி' என்று அந்த வாஸுதேவனே கீதையில் சொன்ன மாதிரி இந்த ஞானி லோகத்தில் எதைப் பார்த்தாலும் அதைப் பரமாத்மாவாகவே பார்த்து இதுவும் அதன் இன்னொரு வேஷம், இன்னொரு விதமான லீலை என்று அதை ரஸிக்கிறான். ஆசாரியாள் பஜகோவிந்தத்தில் 'நந்ததி நந்ததி நந்ததி ஏவ' என்று மூன்று தடவை திரும்பத் திரும்பச் சொன்னது மாதிரி எதிலும் எப்போதும் பரமாத்ம ரஸத்தையே ருசித்துக்கொண்டு ஆனந்தமயமாகவே இருக்கிறான். இந்த ஞானி (வெளி பிரக்ஞை இல்லாத) நிர்விகல்ப ஸமாதியில் இல்லாமல் பஹிர்முகமாக (வெளிப் பிரக்ஞையுடன்) இருக்கிறபோதுகூட அவனுக்கு வெளி — உள் எல்லாம் ஒன்றுதான். வேதத்தில் சொன்னது போல் உள்ளே வெளியே எல்லாம் அந்த ஒரே நாராயணன், வாஸுதேவன், பரமாத்மாதான் வியாபித்திருக்கிறது என்ற உள்ளுணர்வு இருந்து கொண்டே இருக்கும்.

ஞானி அடைய வேண்டியது எதுவுமே இல்லை. ஆகவே, 'அதைத் தா, இதைத் தா' என்று பிரார்த்திக்க வேண்டிய அவசியமே இவனுக்கு இல்லை. ஒரு பிரார்த்தனையும்; காரணமுமில்லாமல், தன்னால் அன்பாகத்தான் இருக்க முடிகிறது என்பதாலேயே பரமாத்மாவிடம் அன்பாக இருக்கிறானே இதுதான் பரம பரிசுத்தமான பக்தி. 'அஹைதுகி பக்தி' (ஹேது அல்லது காரணம் இல்லாத பக்தி) என்று இதை மகா பிரம்ம ஞானியான சுகாசாரியாள் பாகவதத்தில் சொல்கிறார். இவனை ஒருத்தர் கத்தியால் வெட்டினால்கூட அதிலிருந்து காப்பாற்றும்படி இவன் பிரார்த்தனை பண்ண மாட்டான். ஏனென்றால், தான் சரீரமில்லை, ஆத்மாதான் என்ற உள் அநுபவம் இவனை விட்டு அப்போதும் விலகியிருக்காது. அந்த நிலையிலும் பிரார்த்தனை பண்ணாமலேதான் பகவானிடம் பக்தியாக, அன்பு மயமாக இருப்பான்.

'இப்பேர்ப்பட்ட பக்தி எங்கே? கஷ்டம் தீருவதற்காகப் பகவானைப் பிரார்த்திக்கிற ஆர்த்தனின் பக்தி எங்கே? அதைவிட மட்டமாக, போதுமென்கிற அளவுக்குச் சௌகரியம் இருந்தும் இன்னும் வேண்டும் என்று கேட்கிற அர்த்தார்த்தியின் பக்திக்குப் பக்தி என்று பேர் கொடுப்பதே தப்பு மாதிரி இருக்கிறதே!' என்று தோன்றலாம்.

ஆனால் சாக்ஷாத் பகவான் ஞானத்தை வேண்டுகிற ஜிக்ஞாஸுவையும், ஞானத்தை அடைந்துவிட்ட ஞானியையும் சொன்னாற் போலவே இந்த ஆர்த்தன், அர்த்தார்த்தி இரண்டு பேரும் கூடத் தன்னை பஜிப்பதாகத்தான் சொல்கிறார். அதுமட்டுமில்லை. இந்த நாலு தினுசானவரையும் 'ஸுக்ருதின: ஜனா:' அதாவது ஸுக்ருதம் பண்ணினவர்கள் —புண்ணியம் பண்ணினவர்கள் என்று சிலாகித்துச் சொல்கிறார். இரண்டு சுலோகங்களுக்குப் பிறகு, மறுபடியும் இந்த நாலு வகையான பக்தர்களும் சிரேஷ்டமானவர்களே (உதாரமானவர்களே): உதாரா: ஸர்வ ஏவைதே என்கிறார்:

ஏன் இப்படிச் சொன்னார்? (தொடரும்)



## ஜட்ஜ் ஸ்வாமிகள் அதிஷ்டானத் திருப்பணி

நம் தமிழ் நாட்டில் நவகால புரி என்று ஓர் ஊர் இருக்கிறது. எங்கு இருக்கிறது என்று கேட்பவர்களுக்குப் புதுக்கோட்டை விடை அளிக்கிறது. நவ கால புரி என்பது புதுக் கோட்டையேதான்.

இங்கு தான் தவத்திரு ஸ்ரீசாந்தானந்த ஸ்வாமிகள் அன்னை புவனேசுவரிக்கு ஆலயம் எழுப்பியிருக்கிறார்கள். ஸ்வாமிகளின் குருவுக்குக் குருவான ஸ்ரீஜட்ஜ் ஸ்வாமிகள் அதிஷ்டானத்துக்கும் ஸ்ரீபுவனேசுவரி ஆலயத்துக்கும் 30.3.77 அன்று சிறப்பான திருப்பணியோடு விமரிசையாகக் கும்பாபிஷேகம் நடக்க இருக்கிறது. அதனைத் தொடர்ந்து 14.5.77 வரை ஸ்ரீ மண்டல சண்டி மகாயக்ஞமும் நடைபெற இருக்கிறது. இப்பணிகளில் தம் பங்கும் சேர வேண்டும் என்று விரும்பும் அன்பர்கள் அணுக வேண்டிய முகவரி: பொருளாளர், ஸ்ரீ சத்குரு சதாசிவ பிரும்மேந்திர சரஸ்வதி அவதூத ஸ்வாமிகள் அதிஷ்டானம், கீழ 7ம் வீதி, புதுக்கோட்டை.

# ஹேலோ ஷாம்பூகள்—<u>உங்கள்</u> கேசத்தின் பராமரிப்பிற்கெனவே...

## உங்கள் கேசம் கட்டுக்கோப்புடன் வளமோங்கித் திகழவே, உபயோகிப்பீர் புரதம் நிறைந்த ஹேலோ எக் ஷாம்பூ

விசேஷ போஷாக்கு மிக்க ஹேலோ எக் ஷாம்பூவின் வளமிக்க முட்டைப் புரதத்தின் பயனுக, உங்கள் தலையின் மேல் தசைகளும், கேசமும் வலுப்பெறுகின்றன. கேசம் இயற்கைப் பளபளப்புடன் வளமோங்கித் திகழ்கிறது.




HSR.G.JTH

**இயற்கை ஆரோக்கியத்துடன் கூடிய கேசத்திற்கு —ஹேலோ கேசப் பராமரிப்பு!**

**ஹேலோ காஸ்மெடிக் ஷாம்பூ:** இந்த விசேஷ உத்தியின்படி தயாரிக்கப்பட்ட ஷாம்பூவை உபயோகித்து, உங்கள் கேசம் எவ்வளவு மெத்தென்றும், மிருதுவாகவும் இருக்கக் கூடும் என்பதைக் கண்டு கொள்ளுங்கள்.

**ஹேலோ லெமன் ஃப்ரெஷ் ஷாம்பூ:** உங்கள் கேசத்திற்கு இயற்கையான, தூய்மையான பளபளப்பைத் தருகிறது.

**ஹேலோ கான்ஸென்ட்ரேட் ஷாம்பூ:** ஏராளமான நுரைவளத்தின் மூலம் உங்கள் கேசத்தை மென்மையாகவும், கட்டுக்கடங்கியும் வைத்திருக்க சிறிதளவே போதும்.




**ஹேலோ ஷாம்பூகள் மட்டுமே சீரான, சிறந்த உத்தியின்படி தயாரிக்கப் படுகின்றன.**



# ஸ்ரீ வெங்கடேச பெருமாளுக்கு

# ஊஞ்சல் சேவை

எம்பெருமானின் திவ்ய வடிவத்தை வெவ்வேறு பாவனைகளில், வெவ்வேறு அலங்காரங்களில் கண்டு மகிழ்வதில் பக்தர்களுக்கு அபூர்வ ஆனந்தம். எம்பெருமான் குணங்களுக்கு அப்பாற்பட்டவன்தான். அவஸ்தைகளும் அவனைப் பாதிக்காதுதான். விருப்பு வெறுப்புகளால் சஞ்சலப் படாதவன் பரமன். ஆனாலும் அவனது பக்தர்கள் அவனது வடிவத்தையும் அவஸ்தைகளையும் தங்கள் உள்ளத்திலேயே கண்டு களிக்கின்றனர். அதனால் தான் கோபிகா ஸ்திரீகள், முட் புதர்களிலுள்ள முட்கள் கண்ணனின் மலர்ப் பாதங்களுக்கு உபாதை உண்டாக்கிவிடுமோ என அஞ்சினர். பிரமாவின் வேண்டுகோளுக்கிணங்க சாக்ஷாத் நாராயணனே கண்ணனாக அவதரித்து உலக மக்களது மனக் குறைகளைத் தீர்த்து சுகத்தை அளிக்க வந்துள்ளார் என்று தெரிந்திருந்தும் கோபியர்கள் நிலை அப்படி இருந்தது. பக்தர்களின் நிலைமையும் அப்படியேதான்.

கலியுக வரதனான ஸ்ரீ வெங்கடேசப் பெருமானை ஆயாசம் தீர்ந்த நிலையில் அமைதியும் ஆனந்தமும் ததும்பும் கோலத்தில் அசலமான சகல ஐச்வர்யங்களையும் அளிக்கவிருக்கும் பாவத்தில் தரிசிக்க பக்தர்கள் ஏங்குவதில் வியப்பு ஒன்றுமில்லை. ஸ்ரீ எம்பெருமானின் ஊஞ்சல் சேவை இத்தகைய ஆனந்தக் காட்சியாகும்.

திருமலைத் திருக்கோவில் அயனா மகாலில் (கண்ணாடி மண்டபத்தில்) தினசரி நடத்தப்படும் ஊஞ்சல் சேவையின் முக்கியத்துவம் இதுதான். இந்தச் சேவை தினசரி மாலை 6 மணிக்குப் பிறகு நடத்தப்படுகிறது. சகல ஆபரணங்களுடன் அலங்கரிக்கப்பட்ட உத்ஸவ மூர்த்தி, அவரது துணைவியார்களுடன் கோலாகலமாக அலங்கரிக்கப்பட்ட ஊஞ்சலில் எழுந்தருளப்படுகிறது. பெருமாளுக்குகந்த புஷ்ப சாமர முதலிய உபசாரங்கள் செய்த பிறகு வேத பாராயண கோஷங்களுடன் இனிய சங்கீதத்துக்கு இசைவாக ஊஞ்சல் மிருதுவாக ஆட்டப்படுகிறது.

இந்த அரை மணி நேர ஊஞ்சல் சேவையில் பங்குபெற விரும்பும் கிருஹஸ்தர்கள் ரூ. 1000 செலுத்தி டிக்கட்டுகள் வாங்கி சேவையில் கலந்து கொள்ளலாம். ஒரு குடும்பத்தில் ஆறு பேர்கள் இந்தச் சேவையில் கலந்து கொள்ளலாம். சேவைக்குப் பிறகு பெருமானின் உருவம் பதித்த 5 கிராம் எடையுள்ள தங்கப் பதக்கம், வஸ்திரம், கிருஹஸ்தருக்கு வழங்கப்படும். மூலவரின் தரிசனத்துக்கும் ஏற்பாடு செய்யப்படும்.

**எக்ஸிக்யூடிவ் ஆபீஸர்**

**திருமலை திருப்பதி தேவஸ்தானங்கள்**

**திருப்பதி**

# பார்த்திபன் கனவு

குள்ளன் அந்தப் பாதை வழியாகப் போகலாமென்று சமிக்ஞையால் சொன்னபோது, விக்கிரமன் முதலில் கொஞ்சம் தயங்கினான். பிறகு, 'பயம் என்ன?' என்று எண்ணி மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு அந்தக் குறுக்குப் பாதையில் இறங்கினான். உறையூருக்குச் சீக்கிரத்தில் போய் அன்னையைப் பார்க்க வேண்டுமென்ற ஆர்வமானது அவனுடைய மனத்தைத் திடப்படுத்திக் கொள்ள உதவியாயிருந்தது. அதோடு இன்னொரு காரணமும் சேர்ந்தது. அந்த முச்சந்திக்குச் சற்றுத் தூரத்தில் குறுக்குப் பாதையில் நாலு பேர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்ததை விக்கிரமன் பார்த்தான். அவன் குறுக்குப் பாதையில் இறங்கியவுடனே மேற்சொன்ன நால்வரும் எழுந்திருந்து விறுவிறுவென்று மேலே நடக்கத் தொடங்கினார்கள். தான் கொஞ்சம் சீக்கிரமாக நடந்தால் அவர்களைச் சேர்ந்து கொள்ளலாம் என்றும், வழித் துணையாயிருக்குமென்றும் விக்கிரமன் எண்ணியவனாய் அந்தப் பாதையில் வேகமாக நடக்கலானான். ஆனால், குள்ளன் வழக்கத்தைக் காட்டிலும் கொஞ்சம் மெதுவாகவே நடந்தபடியால், விக்கிரமனுடைய எண்ணம் நிறைவேறுவதாயில்லை.

அந்தப் பாதையில் போகப் போக இரு புறங்களிலும் காடு அடர்த்தியாகிக் கொண்டு வந்தது. முன்னிருட்டுக் காலமாதலால், நாலா புறத்திலிருந்தும் இருள் சூழ்ந்து கொண்டு வந்தது. சற்று நேரத்துக்கெல்லாம் நன்றாய் இருட்டி விட்டது. ஆனால், வானம் துல்லியமாயிருந்தபடியால், வழி கண்டுபிடித்து நடப்பதற்கு அவசியமான வெளிச்சத்தை விண்மீன்கள் அளித்தன. மற்றப்படி பாதையின் இருபுறமும் மரங்கள் அடர்ந்திருந்த படியால் ஒரே அந்தகார மயமாயிருந்தது. அந்தக் கனாந்தகாரத்தில், அந்த வனாந்தரப் பிரதேசத்தில் எண்ணில் அடங்காத மின்மினிகள் பிரகாசித்துக் கொண்டிருந்த காட்சியானது, வனதேவதைகள் தங்களுடைய மாயாஜால சக்தியினால் தீபாலங்காரம் செய்திருப்பது போலத் தோன்றியது.

நேரம் ஆக ஆக, விக்கிரமனுடைய தீரம் மிகுந்த உள்ளத்தில்கூடச் சிறிது பதைபதைப்பு உண்டாகத் தொடங்கியது. காட்டில் சில சமயம் சலசலப்புச் சத்தம் உண்டாகும்; துஷ்ட மிருகங்களின் குரல் ஒலியும், ஆந்தைகளின் அருவருப்பான கூவலும் கேட்கும். இந்தக் காட்டுப்பாதை இப்படியே எவ்வளவு தூரம் வரை போகும், இரவில் எங்கே தங்கலாம் என்னும் விஷயங்களை அந்த ஊமைக் குள்ளனிடம் விக்கிரமன் கேட்டுத் தெரிந்துகொள்ள விரும்பினான். ஆனால், இருள் காரணமாகக் குள்ளனுடன் சமிக்ஞை மூலம் சம்பாஷணை நடத்துவது எளிதாக இல்லை.

இருட்டி, சுமார் ஒரு ஜாமப்பொழுது ஆகியிருக்கும், விக்கிரமன் அப்பால் போக இஷ்டப்படவில்லை. இருண்ட அந்த வனப் பிரதேசத்தில் தன்னைத் திடீரென்று தாக்கும் பொருட்டு அபாயங்கள் பல மறைந்து காத்திருப்பதாக அவனுடைய இருதய அந்தரங்கத்தில் ஏதோ ஒரு குரல் சொல்லிக் கொண்டே இருந்தது. திரும்பி ராஜபாட்டைக்கே போய் விடலாமா என்ற எண்ணம் உண்டாயிற்று. போகப் போக இந்த எண்ணம் ரொம்பவும் வலுப்பட்டது. மேலே நடக்க அவனுடைய கால்கள் மறுத்தன. குள்ளனுடைய தோளைத் தட்டி நிறுத்தித் தானும் நின்றான்.

அவன் நின்ற அதே சமயத்தில் எங்கேயோ வெகு தூரத்தில் 'டக் டக்' 'டக் டக்' என்று குதிரையின் காலடிச் சத்தம் கேட்டது.

குள்ளன் அதைக் கூர்ந்து கவனிப்பதைப் பார்த்ததும், விக்கிரமனுக்கு உண்டான ஆச்சரியத்துக்கு அளவே இல்லை. இவன் செவிடனாயிருந்தால் அவ்வளவு இலேசான சத்தம் எப்படி இவனுக்குக் கேட்டது?

உடனே விக்கிரமன் தன் அரையில் மேலங்கியினால் மறைக்கப்பட்டுக் கட்டித் தொங்கிய உடைவாளைப் பளிச்சென்று கையில் எடுத்தான். அந்தக் காரிருளில், நெய் தடவித் தீட்டப்பட்

அமரர் கல்கி

டிருந்த கத்தியானது பளபளவென்று மின்னிற்று. விக்கிரமன் குள்ளனுடைய தலையிலிருந்த பரட்டை மயிரை ஒரு கையினால் பற்றிக் கத்தியை ஓங்கி, ''அடே! உண்மையைச் சொல்லு! நீ நிஜமாகச் செவிடன்தானா? உனக்குக் காது கேட்பதில்லையா? உண்மையைச் சொல்லாவிட்டால், இங்கேயே இந்த க்ஷணமே இந்த வாளுக்குப் பலியாவாய்!'' என்றான்.

குள்ளன் உரத்த குரலில் சிரித்தான். 'கக் கக், கக் கக்' என்ற ஒலியை எழுப்பிய அந்தச் சிரிப்பின் பயங்கரமானது விக்கிரமனுடைய உடம்பின் இரத்தத்தை, உறைந்து போகும்படி செய்தது. இதனால் விக்கிரமன் ஒரு கணம் திகைத்து நின்றபோது, குள்ளன் அவனுடைய பிடியிலிருந்து திமிறிக் கொண்டு விடுபட்டு, ஒரு பத்தடி தூரம் பாய்ந்து சென்றான். அங்கு நின்றபடி இரண்டு கைகளையும் வாயினருகில் குவித்துக் கொண்டு மிகக் கோரமான நீடித்த சத்தத்தை உண்டாக்கினான். மனிதக் குரலுமில்லாமல், மிருகங்களின் குரலுமில்லாமல் கேட்பதற்குச் சகிக்க முடியாத அருவருப்பை உண்டாக்குவதாயிருந்த அந்தச் சத்தத்தைத் தூரஇருந்து கேட்பவர்கள், ''பேய் பிசாசுகள் ஊளையிடுகின்றன'' என்று எண்ணிப் பீதி அடைந்தார்களானால், அதில் ஆச்சரியம் அடைவதற்கு இடம் இராது.

அந்தச் சத்தத்தைக் கேட்ட போது விக்கிரமனுடைய உடம்பு ஒரு நடுக்கம் நடுங்கிற்று. ஆனாலும் உடனே அவன் சமாளித்துக் கொண்டு, அந்த க்ஷணமே அக் குள்ளனை வெட்டிக் கொன்று விடுவது என்ற தீர்மானத்துடன் பாய்ந்து சென்றான். அதே சமயத்தில் பாதையின் ஒரு பக்கத்திலிருந்த மரங்களின் மறைவிலிருந்து நாலு பேர் பாய்ந்து ஓடி வந்தார்கள். அவர்களுடைய கைகளில் கத்திகளைக் கண்டதும் விக்கிரமனுக்கு நெஞ்சில் பழையபடி துணிவும் தைரியமும் பிறந்தன. இருட்டினாலும், தனிமையினாலும், குள்ளனுடைய பயங்கரக் கூவலினாலும் மனிதர் உலகுக்குப் புறம்பான பேய் உலகத்துக்கு வந்திருக்கிறோமோ என்று எண்ணி மனத்தில் திகில் அடைந்திருந்த விக்கிரமனுக்கு, கத்திகளைக் கண்டவுடன், இது மனித உலகத்தைச் சேர்ந்த காரியந்தான் என்ற நிச்சயம் ஏற்பட்டது. எனவே, பீதியும் போய் விட்டது. உடனே தன் வாளை எடுத்துச் சுழற்ற ஆரம்பித்தான். வந்த நால்வரும் விக்கிரமனை ஏக காலத்தில் தாக்கத் தொடங்கினார்கள். விக்கிரமன்



சக்ராகாரமாகச் சுழன்று அவர்களுடன் போரிட்டான். அவனுடைய கத்தியின் முதல் வீச்சிலேயே ஒருவன் படுகாயம் பட்டுக் கீழே விழுந்தான். இன்னொருவனுடைய கத்தி அடிபட்டுத் தூரப் போய் விழுந்தபோது குள்ளன் மேலே விழுந்தது. அவன் 'வீல்' என்று கத்திக் கொண்டு தரையில் சாய்ந்தான். கத்திச் சண்டையில் விக்கிரமன் சாதாரண மனிதனல்ல என்று தெரிந்துகொண்ட மற்ற இருவரும் மிகவும் எச்சரிக்கையுடன் அவனுடைய கத்தி வீச்சுக்குள் வராமல் தூர நின்றே சண்டை இட்டார்கள். அவர்கள் திரும்பித் திரும்பிப் பார்த்ததிலிருந்து யாரையோ அவர்கள் எதிர்பார்த்தது போலத் தோன்றியது. அதற்குத் தகுந்தாற் போல் குதிரைக் காலடிச் சத்தம் அதிவிரைவாக நெருங்கி வந்து கொண்டிருந்தது. வெகு சீக்கிரத்தில் குதிரை வந்து விட்டது. குதிரையின் மேல் ஓங்கிய கத்தியுடன் ஒரு வீரன் உட்கார்ந்திருப்பது நட்சத்திர வெளிச்சத்தில் மங்கலாகத் தெரிந்தது. விக்கிரமனுடன் போரிட்டவர்களில் ஒருவன், ''எஜமானே! சீக்கிரம்!'' என்று கத்தினான். 'குதிரையின் மேல் வருகிறவன் இவர்களுடைய எஜமான் போலும்! நம்முடைய முடிவு நெருங்கி விட்டது' என்று எண்ணினான் விக்கிரமன். ஏற்கெனவே அவன் சண்டையில் களைப்புற்று வந்தான். எனினும் அந்த இரண்டு பேரையும் எப்படியாவது சமாளிக்கலாம் என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால் குதிரையின் மேல் புதிதாக வந்த மூன்றாவது மனிதனோடும் எப்படிச் சண்டையிட்டுச் சமாளிக்க முடியும்?

விக்கிரமனது உள்ளத்தில் அன்னையைப் பார்க்காமல் போகிறோமே!' என்ற எண்ணம் உதித்தது. பல்லக்கிலிருந்து கனிவு ததும்பிய கண்களுடன்

தன்னைப் பார்த்துப் பேசிய பெண்ணின் நினைவும் வந்தது. உடனே, பட்டத்து யானைமேல் வந்த சக்கரவர்த்தியின் முகம் அவன் மனக் கண்ணின் முன் தோன்றியது. 'நரசிம்ம மகா சக்கரவர்த்தியின் ஆட்சியா இவ்வளவு லட்சணமாயிருக்கிறது! பல்லவ சாம்ராஜ்யத்தில் வழிப்பறியும் கொள்ளையுமா?' என்று நினைத்தான். 'இப்படிப்பட்ட சக்கரவர்த்தியா நமது சோழ நாட்டை ஆளுகிறார்?' என்ற எண்ணத்தினால் உண்டான ஆத்திரத்துடன் கத்தியை வீசினான். இருவரில் ஒருவன் விழுந்தான்.

அதே சமயத்தில் குதிரை மீது வந்த வீரன் தன்னுடைய கத்தியை இன்னொருவன் மீது செலுத்த அவனும் மாண்டு விழுந்தான்.

விக்கிரமனுக்கு உண்டான வியப்புக்கு அளவில்லை. அவ்வீரன் தன் மீது வீச



வேண்டிய வாளைத்தான் தவறுதலாய் அவன் மீது செலுத்திவிட்டானே என்று நினைப்பதற்கு இல்லை. ஏனெனில் தான் மேலங்கி அணிந்திருந்தபடியாலும் அவர்கள் வெறும் உடம்பினரா யிருந்த படியாலும் எளிதில் அடையாளம் கண்டுபிடிக்கக் கூடியதாயிருந்தது.

அப்படியானால் இந்த வீரன் யார்? இவர்களால்எதிர்பார்க்கப்பட்டவன் இல்லையா?

அச் சமயம் குதிரை மேலிருந்து கீழே குதித்த அவ்வீரன், ''ஐயா! நீர் யார்? இந்த இருட்டில் தனி வழியே வந்த காரணம் என்ன?'' என்று வினவினான்.

(தொடரும்)

---

# சிரிக்க வைக்கும்

# சிங்காரி!

இரண்டாவது உலகப் போரில் நாஜிகளின் கை ஓங்கி இருந்த வேளை. பிரிட்டனிலிருந்து ஃபிரட் விம்புஷ் என்ற ராணுவ வீரன் பிரான்ஸிலுள்ள படைத்தளத்துக்கு அனுப்பப்படுகிறான். நடிப்பாற்றல் மிக்கவன் ஃபிரட். ராணுவ அதிகாரிகள், வீரர்கள் நிறைந்த அரங்கில் பொழுது போக்கிற்காகப் பெண் வேஷமணிந்து நடித்துப் பாராட்டுப் பெறுகிறான். ஒரு காட்சி முடிந்து அடுத்த காட்சிக்காக மாற்றுடையில், மயக்கும் அழகியாக மேடைக்கு வந்த ஃபிரட்டுக்கு அதிர்ச்சி. அவையில் யாருமில்லை. திடீரென்று புகுந்த



நாஜிகள் அத்தனை பேரையும் கைதிகளாக்கிக் கொண்டு போயிருந்தார்கள். பெண் வேஷமணிந்து நின்ற ஃபிரட் தன் உண்மை நிலையை வெளிப்படுத்தினால் வேவுகாரன் என்று குற்றம் சாட்டி கட்டுக் கொல்லப்படுவான். ஆகவே தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாமல் பெண்ணாகவே நடிக்கிறான். அவள் அழகில், ஒயிலில் நாஜி தளபதி மயங்கி அவளைக் 'கெஸ்டபோ'க்களிடமிருந்து காப்பாற்றுவதாகக் கை கொடுக்கிறார். இங்கிருந்து ஃபிரட்டின் சாகஸங்கள் ஆரம்பமாகின்றன. படம் பார்ப்போரைப் பரவசப்படுத்தித் தாங்க முடியாத சிரிப்பில் திக்குமுக்காட வைக்கின்றன.

நாஜிகளின் 'காவல் நிலையங்க'ளிலும் 'காம்ப்'களிலும் அவர்களுக்குக் 'கடுக்கா' கொடுத்துத் தப்பிச் செல்லுதல்; காதல் கொண்ட ராணுவ அதிகாரியைத் தன் சொகுசான தளுக்கு மினுக்குகளினால் சொக்க வைத்துக் காதல் போதை ஏற்றிப் பைத்தியமாக்குதல்; நாஜிகளால் ஆக்கிரமிக்கப்பட்ட பிரான்ஸிலிருந்து தப்பிச் செல்ல பிரிட்டிஷ் மாணவிகளுக்கு உதவுதல் ஆகிய சந்தர்ப்பங்களில் 'நடிப்பாற்றல் அற்புதம், அபாரம்!' என்று கூறும்படி இருக்கிறது.

டானி லா ரு என்ற பிரெஞ்சு நடிகர் ஃபிரடெரிக்காவாக நடித்திருக்கிறார். நாஜிகளின் கண்ணில் மண்ணைத் தூவி விட்டு மாணவிகளுடன் இங்கிலாந்து தப்பி வரும் ஃபிரட்டை அவரது அபாரமான திறமைக்காகப் பாராட்டி மறுபடியும் விரோதிகளிடையே பெண் வேஷத்திலேயே உளவறிந்து வர அனுப்புகிறார்கள் பிரிட்டிஷார் என்றால் (கதைப்படிதான்) ஃபிரட், ஃபிரடரிக்காவாக என்ன போடு போட்டிருப்பார் என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

**Our Miss Fred** — இதுவும் ஒரு பிலிம் டைரக்ஸ் கார்ப்பரேஷனின் வெளியீடுதான். ஒன்றரை மணி நேரம் — தேர்தல் தமாஷ்களைக் கூட மறந்து விடுகிறோம்!

—கௌசிகன்

# அமிர்தாஞ்சனம்

## தலைவலி, ஜலதோஷம், சுளுக்கு அனைத்துக்கும் குணமளிக்க இல்லந்தோறும் இருக்கவேண்டிய நல்ல மருந்து.







வலி, ஜலதோஷம், சுளுக்கு ஆகியவற்றிற்கு சிறிதளவு அமிர்தாஞ்சனம் தடவுங்கள். அதன் சிறப்பான பத்து மருந்துகளின் கலவை வியக்கத்தக்க வகையில் உங்களுக்கு நிமிஷத்தில நிவாரணமளிப்பதை உணர்வீர்கள். சிக்கனமான ஜாடி, சிறிய பாட்டில் மற்றும் மலிவு விலையில் அடக்கமான டப்பாவிலும் கிடைக்கிறது.

அமிர்தாஞ்சனம்
80 ஆண்டுகளுக்கு
மேலாக நம்பகமான
குடும்ப நிவாரணி




அமிர்தாஞ்சன் லிமிடெட்

AM-1255

□ ''மாத்ரு பூமி'' (பழம் பெரும் மலையாளப் பத்திரிகை) குடியரசு தினச் சிறப்புப் பதிப்பில் (30-1-77) இந்தியாவில் வழங்கப்படும் பல்வேறு மொழிப் பத்திரிகைகளில் வெளி வந்த சிறந்த கதைகளைத் தேர்ந்தெடுத்து, மொழிக்கு ஒன்று விதம் மொழிபெயர்த்துப் பிரசுரித்திருந்தார்கள். அதில் தமிழ் மொழியில் 'கல்கி'யில் முதல் பரிசு பெற்ற திரு அழகாபுரி அழகப்பன் அவர்களின் கதையான ''கணங்களும் யுகங்களும்'', ''நிமிஷங்களும் யுகங்களும்'' என்ற தலைப்பில் மொழிபெயர்க்கப்பட்டிருந்தது. அக்கதையினை மலையாளத்திலும் படித்துச் சுவைத்தோம்.

அருவங்காடு
27–1–77 வெ. பாரதி

□ ''குடிப் பழக்கம் உங்கள் குழந்தைகளைப் பட்டினி போடும்'' – (ஜனவரி 30உ. கல்கியில் வெளியான துணுக்கு) என்ற புதுமையான வாசகம், குறிப்பாகச் சென்னையிலிருந்து பாண்டிச்சேரி செல்லும் பேருந்துகளில் பொறிக்கப்பட்டுள்ளது என்பதுதான் விசேஷம். இன்னும் பாண்டிச்சேரி 'தண்ணி'யிலேயே மூழ்கியிருப்பதுதான் தெரியுமே!

சென்னை–2
27–1–77 க. மாரியப்பன்

□ குடியரசு தினத்தன்று திருச்சி வானொலி நிலையத்தில் திரு ஏ. எஸ். ராகவன் அமரர் கல்கி அவர்களின் சிறுகதைகள், நாவல்களைப் பற்றிப் பேசினார். அந் நாளில் அமரர் கல்கி அவர்கள் தம் கதைகளின் மூலம் பாரதி, காந்தி மகான் போன்றோரின் கருத்துக்களைப் பிரபலப்படுத்தியதையும், தேசிய உணர்ச்சியை எழுத்தில் கலந்து ஊட்டிய விதத்தையும் ஏ. எஸ். ஆர். அழகாகப் படம் பிடித்துக் காட்டினார். முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் இந்த இலக்கியங்கள் பிறந்திருந்தாலும் இன்றும் அவை வாழ்க்கையின் அன்றாடப் பிரச்னைகளுக்கு வழிகாட்டுவனவாய் உள்ளன என்று கூறினார். 'அலை ஓசை' நாவலில் வரதட்சிணைக் கொடுமையை விவரிக்கும் விதத்தையும் புதையல் தேடப் போய்க் கறுப்புப் பணத்தைக் கண்டு பிடித்ததாகக் கருத்து அமைந்த 'கைதி 888' கதை பற்றியும் ஏனைய சிறுகதைகளைப் பற்றியும் அவர் ஆற்றிய விமரிசன உரை வெகு சிறப்பாய் இருந்தது.

சேலம்–1
26–1–77 பா. சௌந்தரராஜன்

□ இரண்டு நாட்களுக்கு முன் புரசைவாக்கத்திலுள்ள திரையரங்கமொன்றில் ஒரு தமிழ்ப் படம் காணச் சென்றிருந்தேன். பிரதான படம் ஆரம்பிப்பதற்கு முன்னால் 'கம்லி' என்ற டாக்குமெண்டரி காண்பிக்கப்பட்டது. படத்தின் தொடக்கத்தில் ''வரதட்சிணையை எதிர்த்துப் போராடிய ஒரு பெண் டாக்டரின் கதை'' என்று தமிழில் விளக்கம் கொடுக்கப்பட்டது. அதன் பிறகு எந்தவிதமான விளக்கமும் இடையாது. படம் முடியும்வரை நரித்தி வசனங்கள்தான். சுமார் 24 நிமிடங்கள் திரையில் ஓடிப் பொறுமையைச் சோதித்த இப்படத்தை எதற்குத்தான் திரையிட்டார்களோ! படத்தின் நடுவே கண் பார்வையை அக்கம் பக்கத்தில் திருப்பினேன். பாதிப்பேர் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தனர். (அது இரவுக் காட்சி வேறு) 'அறுவை' என்ற சொல்லின் அர்த்தத்தை அன்றுதான் முழுமையாக உணர்ந்தேன். பொதுமக்களின் பணமும் நேரமும் பாழ்.

சென்னை–23
26–1–77 வி. சௌந்தரராஜன்

□ கும்பகோணம் ராஜா வேத பாடசாலைக்கு உதவ முன்வர வேண்டுமென்ற கோரிக்கையைக் கல்கி 16–1–77 இதழில் வெளியிட்டதற்கு மிகவும் நன்றி.




அக்கட்டுரையில் விவரிக்கப்பட்டுள்ள திட்டப்படி அளிக்கும் நன்கொடைகளுக்கு வருமான வரி விலக்கு உள்ளதென்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கும்பகோணம்
20-1-77 டாக்டர் வி. ஆர். எல். சர்மா

□ 'பசித்தவன் பழங் கணக்குப் பார்ப்பது' என்பது போல் இன்றுள்ள மாறுபட்ட அரசியல் சூழ்நிலையில் சிலர் தங்களுடைய இயக்கங்களுக்குத் தேசிய நோக்கம் கொடுக்க முற்பட்டிருக்கிறார்கள். ஆயினும் வரலாற்றையே திருத்தி எழுதித் தங்கள் கட்சிக்கு ஆதாயம் தேட முற்படுவது விவேகமில்லை. சமீபத்தில் 'கழக' நாளேடு ஒன்றில் பெரியார் ஈ.வே. ராமசாமி நாயக்கர் அவர்கள் தூண்டுதலாலேயே ராஜாஜி அவர்கள் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தைத் தொடங்கினார் என்றவாறு எழுதப்பட்டிருந்தது. இது முற்றிலும் உண்மைக்குப் புறம்பானது.

சென்னை
27–1–77 கே. வேதமூர்த்தி

□ பத்தாண்டு நிறைவு விழாவினை அண்மையில் கொண்டாடிய மதுரைப் பல்கலைக் கழகம் தன் முதல் துணைவேந்தரான தெ. பொ. மீ.க்குப் பல்கலைக் கழக முதல் செம்மல் (Fellow) என்ற சிறப்பினை அளித்துத் தனக்குப் பெருமையினைத் தேடிக் கொண்டது. தமிழில் விஞ்ஞான நூல்களை எழுதி வழிகாட்டிய பேராசிரியர் பெ. நா. அப்புஸ்வாமி இப்பெருமையுற்ற மற்றொரு செம்மல்.

''ஆண்டொன்று போனால் வயதொன்று போகும்'' என்பது அடிக்கடி கேட்டுப் பழகிய பாட்டு. 'ஆண்டொன்று ஆனால் ஆக்கம் ஒன்று சேரும்' என்பது நாம் கண்ணாரக் காணும் தெ. பொ. மீ.யின் வரலாறு. இந்த அறிவு இமயம் பல்லாண்டு வாழ்க!

மதுரை
8–1–77 பேராசிரியர் க. குழந்தைநாதன்

# தொழில் திறமையும் உறுதியும் கொண்ட பலரில் அவரும் ஒருவராக இருக்கலாம்.

அவருக்கு உதவி தேவை, ஆனால்
எப்படி கிடைக்கும் என்று அறியாமல் இருப்பார்.



## அவருக்கு நீங்கள் செய்ய வேண்டிய உதவி பாங் ஆப் பரோடாவிற்கு செல்ல காட்டும் வழி.

பாங்க் ஆப் பரோடாவின் அனேக விதமான உதவித் திட்டங்கள் ஆதிவாசி
மக்கட்கும், கீழ் தாழ்த்தபட்டவர்களுக்கும் மற்றும் பலருக்கும் கிடைக்கும்.
பால் கறக்கும் ஆடு மாடுகள் வாங்க, பண்ணை வளர்ப்புக்கு கோழிகள் வாங்க,
செம்மறியாடு, வெள்ளாடுகள், பன்றிகள் வாங்க பண உதவி கிடைக்கும்.
அல்லது விவசாயம், மீன் பிடித்தல், தேனீ வளர்த்தல் மற்றும்
எந்த விதமான தொழில்களுக்கு ஒத்தாசை கிடைக்கும்.
எங்கள் பாங்கியின் மூலம் அவர் வளமையான வாழ்வு பெற
எவ்வளவோ வழிகள் உள்ளன. இதை அவருக்கு நீங்கள் உணர்த்துங்கள்.
அல்லது எங்களிடம் அழைத்து வாருங்கள் – நேரிடையாகவோ
அல்லது ஏதாவது நல்வாழ்வு ஸ்தாபனங்கள் மூலமாக.
ஒரு விளக்கு மற்ற விளக்குகளை ஏற்ற உதவுவதுபோல் உங்கள்
எல்லோரிடமும் உதவும் குணம் பிரகாசிக்கட்டும்.



**பாங்க் ஆஃப் பரோடா**

இந்திய அரசாங்க நிறுவனம்.

1000 கிளைகளுக்கும் மேலாக இந்தியாவிலும் மற்றும் வெளிநாடுகளான பெல்ஜியம்,
பிஜி தீவுகள், கயானா கென்யா, மொரிஷியஸ், ஓமன்,
ஐக்கிய அரபு நாடுகள் மற்றும் யூகே. விலும்.

BOB 18 TM

பிரபாத் ரஞ்சன் சர்க்கார் பீகாரில் ஜமல்பூர் ரயில்வே பள்ளியில் மெட்ரிகுலேஷன் படித்து, பிறகு கல்கத்தா வித்யாசாகர் கல்லூரியிலும் படித்தார். கொஞ்ச காலம் 'ஸ்டேட்ஸ்மென்', 'ஆனந்த பஜார்' பத்ரிகா காரியாலயங்களில் வேலை செய்தார்! இரண்டாவது உலகப் போர் சமயத்தில் ஜமல்பூர் ரயில்வே ஒர்க்ஷாப்பில் ஒரு குமாஸ்தாவாக வேலைசெய்தார். இவருக்கு ஜாதகம், ஜோதிடம், கைரேகை இவைகளில் கொஞ்சம் பரிச்சயம் உண்டு. கல்கத்தாவில் தம் மாமா வீட்டில் இருந்தபோது இவர் இதைக்கற்றுக்கொண்டார்.



1954ல் பீகாரில் 'ஆனந்த் மார்க் பிரசாரக் சங்' என்ற பெயரில் ஓர் இயக்கத்தை ஆரம்பித்தார். இதில் சேருகிறவர்களுக்குக் கடைப்பிடிக்கப் பல விதிகளை வைத்தார். அரைகுறைப் படிப்புப் படித்தவர்களும், நன்றாகப் படித்தவர்களும் கூட இதில் சேர்ந்தார்கள். தம்மை ஒரு பரம புருஷன் என்று கூறிக்கொண்ட இவர், 'பாபா' என்ற பெயரையும் சூட்டிக்கொண்டார். இந்தப் பெயரை ஜபித்துக் கொண்டே இருந்தால் மோட்சம் கிடைக்கும் என்று இவரது சீடர்களை நம்ப வைத்தார்.



கொஞ்ச நாட்கள் சீடர்களாக இருந்தவர்களை 'அவதூத்' ஆக்கினார். இந்த அவதூத் ஆவதற்கு முன் அவர் சில கஷ்டமான காரியங்களைச் செய்ய வேண்டும். நட்ட நடுநிசியில் ஒரு பெரிய பையில் இரண்டு மனித மண்டை ஓடுகளை எடுத்துக் கொண்டு சுடுகாட்டுக்குப் போய், கத்தி, மஞ்சள் இவற்றை வைத்துக் கொண்டு நிர்வாணமாகப் பூஜை செய்ய வேண்டும். பிறகு 'எனக்குத் தாய் கிடையாது, தந்தை கிடையாது, மனைவி கிடையாது, மக்கள் கிடையாது. ஆனந்த மூர்த்தியே (சர்க்காரின் இன்னொரு பெயர்) எனக்கு எல்லாம்'' என்று ஓர் உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டும். தனதுபெயரை மறந்து ஆனந்த மூர்த்தி கொடுக்கும் பெயரை வைத்துக் கொள்ள வேண்டும். காவி உடை அணிய வேண்டும். நீண்ட முடியும் தாடியும் வளர்க்க வேண்டும். பாபா சொல்லும் எதையும் செய்யத் தயாராக இருக்க வேண்டும்.

இவர் கொஞ்சம் கொஞ்சமாக அரசியலில் தலையிட ஆரம்பித்தார். சில அயல் நாட்டவரும் இந்த இயக்கத்தில் சேர ஆரம்பித்தனர். ஜனநாயகத்

# "ஆனந்த மார்க்"



துக்கு எதிராகப் பேச ஆரம்பித்தார். பீகாரில் இதன் தலைமைக் காரியாலயம் இருந்தது. இந்த இயக்கத்தில் டாக்டர்கள், என்ஜினியர்கள், பேராசிரியர்கள் போன்றவர்கள் கூடச் சேர்ந்தனர்.

1975ல் இந்த இயக்கத்தில் அரசு உத்தியோகஸ்தர்கள் சேரக் கூடாது என்ற உத்தரவு வந்தபோது சில அதிகாரிகள் தங்கள் அடிப்படை உரிமையை இது மீறுகிறது என்று கோர்ட்டில் 'ரிட்' போட்டார்கள்.

இளம் வயதிலிருந்தே இவர் பெரிய யோகி, ஞானி, சித்து வேலை செய்தவர் என்ற கதைகள் பரவ ஆரம்பித்தன. சிறுவனாக இருந்தபோது காட்டுக்குப் போய் ஒரு புலி மீது ஏறிக்கொண்டு ஊருக்குள் வந்தார் என்றும், பல மொழிகள் தெரிந்தவர் என்றும் கூடச் சொல்ல ஆரம்பித்தனர்.



'பாபா' என்ற பெயரில் இந்த விஷயங்கள் அச்சிட்டு வெளியிட்டார்கள்.

இவருடைய சக்தியால்தான் 1962-ல் சீனாக்காரன் எல்லையை விட்டுத் திரும்பி விட்டதாக அவர்கள் சொல்லிக் கொண்டனர்.

1966ல் இவர் தம் தலைமைப் பீடத்தை மேற்கு வங்காளத்துக்கு மாற்றினார். அங்கே இவர்கள் கிராமவாசிகளின் நிலங்களைப் பலாத்காரமாகச் சொந்தமாக்கிக்கொள்ள முயன்றபோது கலகம் ஏற்பட்டுக் கிராமவாசிகள் பல அவதூத்களைக் கொன்று விட்டனர். மரணத்தைக்கூடத் தடுப்பேன் என்று கூறிய பாபாவின் கூற்றை இந்தச் சம்பவம் பொய்யாக்கி விட்டதால் சில படித்த அவதூத்கள் இயக்கத்தை விட்டு வெளியேறினர்.



1971ல் இம்மாதிரி வெளியேறிய ஆறு அவதூத்களை இவர்கள் மிகவும் கொடுமையாகச் சித்ரவதை செய்து கொலை செய்ததோடு மட்டுமின்றி அவர்களுடைய மண்டை ஓடுகளைக் காட்சிப் பொருட்களாக வைத்துக் கொண்டதாகக் கூறப்படுகிறது. இதற்காக சர்க்கார் கைது செய்யப்பட்டார். பாபா வெளியே வந்துவிடுவார் என்று பேசிக் கொண்டார்கள். சுப்ரீம் கோர்ட்டும் அவருக்கு ஜாமீன் கொடுக்க மறுத்து விட்டது. இதைத் தொடர்ந்துதான் சுப்ரீம் கோர்ட் நீதிபதியின் காரை வெடிகுண்டு வைத்துத் தாக்கஇவர்கள் முயன்றனர்.

பாபாவுக்கு ஆயுள் தண்டனை கொடுக்கப்பட்டு விட்டது.

சர்க்காரின் மனைவி உமாவுக்கே இவரது செயல்கள் பிடிக்காமல், தம் மகனுடன் தனியாக வசிக்க ஆரம்பித்து விட்டதோடல்லாமல், இந்த வழக்கில் கணவருக்கு எதிராகவும் சாட்சியமளித்தார். தமது கணவரை இவர் 'மகா பாவி' என்று வர்ணித்தார்.

ஆதாரம் : **பிளிட்ஸ்** — தமிழில்: **கே. ஆர்.**

சிவனடியார்களைத் துன்புறுத்தவும் மதுரையையே அழித்து விடவும் சமணர்கள் பல உபாயங்கள் செய்தார்கள். ஒரு யானையை ஏவினார்கள். சோமசுந்தரப் பெருமான் ஒரு வில் வீரனாக வந்து யானையைக் கொன்றார். மதுரைக்கு வடகிழக்கே மேலூர் நெடுஞ்சாலையில் யானை மலையாக நிற்பது இறந்த அந்த யானையே ஆகும்.

சமணர்கள் ஏவிய மாய நாகம் பாண்டியனால் கொல்லப்பட்டு நாக மலையாக மாறியது. மதுரைக்கு மேற்கே இருக்கிறது இது.

சிவனடியார்கள் பசுவதை செய்ய மாட்டார்கள் என்று ஒரு மாயப் பசுவைச் சமணர்கள் ஏவ, சோமசுந்தரர் காளையாக உருவெடுத்து அப்பசுவின் வீரியத்தை அடக்கி மலை ஆக்கினார். மதுரையின் தென்மேற்கில் பசுமலை இருக்க வடக்கில் காளை இடப மலை எனும் (அழகர் கோயில் மலை) பெயருடன் நின்றது. —நிலவி வரும் வரலாறு

# மதுர நாயகி

பி.வி.ஆர்

## 7

அம்மா சாவித்திரியின் ஆவலைத் தாண்டிவிட்டு டிபன் சாப்பிடச் சென்ற ரமணி தன்னுள்ளேயே சிரித்துக் கொண்டான். 'எனக்கு வம்பு என்றால் பிடிக்காது' என்று சொல்லிக் கொண்டு அதிலேயே ஈடுபடும் சிலரைப் போல் அம்மா இல்லைதான். இருந்தாலும் தன் பிள்ளையைப் பற்றிய கதை ஒன்று இருக்கிறது என்பதை அம்மா எண்ணிப் பார்க்கும்போது அவள் கண்டிப்பாக இரவுவரை பொறுக்க மாட்டாள். அவனை டிபன் சாப்பிடவிடாமல் செய்யப் போகிறாள்.

இப்படி யெல்லாம் சிந்தித்துக் கொண்டே ரமணி குளியலறைக்கு முகம் கழுவச் சென்றான். சில வருடங்களுக்கு முன் நடந்த நிகழ்ச்சி கண் முன்னால் நின்றது.

சென்னையில் வக்கீல் படிப்பை முடித்து விட்டு, ஓராண்டு ஒருவரிடம் அப்ரெண்டிஸாக இருந்த பின், தொழில் பிரமாணமும் எடுத்தாகி விட்டது. இனிமேல் வாதி, பிரதிவாதி, சாட்சி, சரங்கி என்று அல்லாட வேண்டியதுதான்.

சென்னையிலேயே தொழில் ஆரம்பிக்கலாம், மதுரையைக் காலி செய்து விட்டு அம்மாவுடன் பட்டணத்தில் குடியேறலாம் என்றுதான் ரமணி திட்டம் போட்டிருந்தான். ஏற்கெனவே அவனுடைய வக்கீல் படிப்பை வெறுத்திருந்த சாவித்திரி அவனுடைய வார்த்தைகளைக் கேட்டபோது சீறி விழுந்தாள். வைகைக் கரையில்தான், தன்னுடைய உடல் சாம்பலாக வேண்டும் என்று சபதம் செய்தாள். அதுதான் அவளுடைய ஆசை என்றால் அதைக் கண்டிப்பாகக் கார், விமானம் மூலமாக நிறைவேற்றி வைப்பதாக ரமணி உறுதிமொழி அளித்து, தன்னுடன் சென்னைக்கு வந்திருக்கத் தாயாரிடம் கெஞ்சினான். சாவித்திரி மசியவில்லை. அவன் வேண்டுமானால் கறுப்புக் கோட்டைப் போட்டுக் கொண்டு சென்னையெல்லாம் திரியட்டும், தன்னால் மதுரையை விட்டுப் பக்கத்து ஊருக்குக் கூடக் குடியேற முடியாது என்று அவள் வெட்டு ஒன்று, துண்டுகள் ஏழெட்டாகச் சொல்லி விட்டாள்.

மதுரையின் சந்து பொந்துகளை மாற்றி அமைத்தாலும் அமைக்கலாம். அம்மாவின் மனத்தை மாற்ற முடியாது என்பதைச் சிறிது தாமதமாகவே உணர்ந்த ரமணி வேறுவழியில்லாமல், தன் கறுப்புக் கோட்டு, கழுத்துப் பட்டை, காலர் எல்லாவற்றையும் மதுரை லாண்டரியிலேயே போடுவது என்று முடிவு எடுத்தான்.

சென்னையை மறந்து மதுரை என்ற நிலை ஏற்பட்டபோது, தன் மனம் அதில் லயிப்பதை ரமணி உணர்ந்தான். மதுரை மண்ணை நம்பி வந்தவர்கள் மீனாட்சி — சுந்தரேசுவர



ருடைய கிருபாகடாட்சத்தால் என்றுமே வீண் போனதில்லை என்று பலர் சொல்லி, அவன் கேள்விப்பட்டிருக்கிறான். ஆனால் அப்படி நம்பி வந்தவர்களில் அவன் ஒருவனாக இல்லாததால், இந்த நம்பிக்கை அவனுக்கு இருக்கவில்லை. இருக்கக்கூடாது என்றும் நினைத்தான். அவன் மதுரையிலேயே பிறந்தவனாயிற்றே? மீனாட்சிக்கு அவனைக் காப்பாற்றுவதில் ஒரு தனிக் கடமையே அல்லவா இருக்கிறது!

மனம் மதுரையில் லயித்தது என்று கூறுவதை விட மதுரைக் கோர்ட்டுகளில் பதி போயிற்று என்று சொல்வதே பொருந்தும். கடந்த ஐம்பது வருடங்களில் பல சிங்கங்கள் மதுரை, ராமநாதபுரம் ஜில்லா கோர்ட்டுகளில் கர்ஜித்திருக்கின்றன. தூக்கு மேடை வரை போனவன் ஒரு சிங்கத்தால் கவ்வப்பட்டு மீண்டும் சமூகக் காட்டில் அலைய வைக்கப்பட்டிருக்கிறான். எல்லாச் சொத்துக்களும் குடும்ப வழக்கில் என்னாகி விட்டது என்று மீனாட்சியின் கால்களில் விழுந்து அழுத கட்சிக்காரன் இன்னொரு சிங்கத்தால் தலை தூக்கியிருக்கிறான்!

ரமணிக்கு அந்தச் சிங்கங்களை நினைத்துப் பார்க்கப் பெருமிதமாக இருந்தது. வைத்திய நாதய்யர், ராமானுஜம், லட்சுமி நாராயண ஐயர் என்று அந்த மறைந்த சிங்கங்கள் புத்துயிர் பெற்று அவனுடைய மனக் காட்டிலிருந்து வெளியேறிக் கண் முன் நின்றனர். இவர்களை யெல்லாம் ஏற்கெனவே தெரியும். இவர்களுடன் தனக்குப் பரிச்சயமே உண்டு என்ற பிரமை கூட ரமணிக்கு ஏற்பட்டது.

அவன் ஒரு சங்கற்பம் செய்துகொண்டான். தானும் ஒரு பெரிய வக்கீலாக வேண்டும்!

இதற்கு முதற் படி ஒரு பெரிய வக்கீலிடம் ஜூனியராகப் போக வேண்டும். வக்கீல் தொழிலில் முதல் ஐந்து வருடமோ பத்து வருடமோ வருமானம் இருக்காது. ஆனால் இந்தப் பயிற்சிக் காலத்தில் கிடைக்கிற அனுபவம் இருக்கிறதே, அதுதான் எதிர்காலக் கோபுரத்துக்கு அஸ்திவாரம். அந்த அஸ்திவாரம் நன்றாக அமைய வேண்டுமானால் அவன் ஒரு பெரிய வக்கீலிடம் ஜூனியராக வேலை செய்ய வேண்டும்.

ஒரே ஒரு பெயர்தான் எல்லாரையும் ஒதுக்கிவிட்டு ரமணியின் மனத்தில் தங்கியது. அவர்தான் ராமையா. அடிக்கடி சென்னை, பம்பாய், தில்லி என்று விமானத்தில் சென்று திரும்பும் வக்கீல் அவர். எதிர் வக்கீல்களை நாவன்மையால் மடக்கி, ஜட்ஜுகளைப் புன்




முறுவல், அன்பு, மரியாதை இவற்றால் மயக்கிக் கேஸ்களை ஜெயிக்கிறவர் அவர்.

ஆனால் அவரிடம் ஏற்கெனவே நாலைந்து ஜூனியர்கள் இருந்தார்கள். பல நாட்கள் அவர் பின்னாலேயே அலைந்தான். சிபாரிசுகள் மூலம் முயற்சி செய்தான். ராமையா காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை.

அவனுடைய மனம் இரண்டாக ஒடிந்து போய்க் கொண்டிருக்கையில் எதிர்பாராத வண்ணம் ஒரு நிகழ்ச்சி நடந்தது.

சிம்மக்கல் அருகே ஒரு படகுக் கார் வேகமாக வந்து கொண்டிருந்தது. விளாம்பழங் களைச் சுமந்தவனாய் ஒரு கிழவன் குறுக்கே போய்க் கொண்டிருந்தான். இதைச் சிம்மக்கல் பஸ் ஸ்டாப்பில் நின்று ரமணி பார்த்துக் கொண்டிருந்தான். படகைப் பார்த்த உடனேயே அது ராமையாவின் கார் என்று தெரிந்து விட்டது.

வேகமாகச் சென்ற கார் திடீரென்று 'க்ரீச்'சென்று ஓலமிட்டுக்கொண்டே நின்றது.

விளாம்பழங்கள் சிதறின.

கிழவன் நடு ரோட்டில் விழுந்து கிடந்தான்.

ரமணி மற்றவர்கள் பின்தொடரக் காரை நோக்கி ஓடினான். ராமையாவின் கார் ஆயிற்றே?

நல்லவேளையாக விளாம்பழங்களுக்கு ஏற்பட்ட கதி கிழவனுக்கு ஏற்படவில்லை. ஆரம்ப வலியை ஒருவாறு சமாளித்துக் கொண்டு எழுந்தான்.

அதே சமயம் காரின் கதவை ஓர் அலட்சியத்துடன் திறந்து கொண்டே ஹரிணி இறங்கிக் கிழவனை நோக்கி வந்தாள். ரமணி அப்போது குனிந்து ஒரிரு விளாம்பழங்களை எடுத்து மணம் வீசுகிறதா என்று நோட்டம் பார்த்துக் கொண்டிருந்தான்.

''ஏய் கிழவா!''என்று ஆரம்பித்த ஹரிணி, ''இத்தனை வயசாகியும் ரோட்டிலே நடக்கத் தெரியாது உனக்கு?'' என்று கேட்டாள்.

கிழவன் விழித்தான். காரின் நீள அகலமே ஒரு பயத்தை ஏற்படுத்தியது.

''ஏம்ப்பா, அம்மா கேக்கறாங்களே? பதில் சொல்லு'' என்ற ரமணி தொடர்ந்து, '' அம்மாகிட்டே மன்னிப்புக் கேளு!'' என்றான்.

கூட்டத்தில் பலர் வாய் விட்டுச் சிரித்தார்கள்.

''என்ன மிஸ்டர், இடக்கோ?'' என்றாள் ஹரிணி.

அவள் பார்த்த பார்வையில் கோபம் பளிச்சிட்டது.

''இல்லியே... இடக்கு இல்லே. நீங்க எவ்வளவு சின்னக் காரிலே எவ்வளவு மெதுவா வர்றீங்க! இந்தக் கிழவன் ஒரு மலையைச் சுமந்துண்டு குறுக்கே ஓடறான்... உங்களுக்கு அவன் வழி விட வேண்டாம்?'' என்றான் ரமணி. ராமையா பெரிய வக்கீல்தான். ஆனால் அதற்காக அவள் செய்த தப்புக்கு களைச் சும்மா விடக் கூடாது!

ஹரிணி அவனை இலட்சியம் செய்யவில்லை.

''கிழவா! சீக்கிரம் எல்லாத்தையும் பொறுக்கிப் போட்டுக்கோ... நான் என் வண்டியை எடுக்கணும்.''

''ஒரு பழம் உங்க வண்டி பானெட் மேலே பட்டு, பானெட் நசுங்கி யிருக்கு!'' என்ற ரமணி, ''இந்தாப்பா இந்த நசுங்கலுக்கு நீதான் பொறுப்பு. டி.வி.எஸ்.ஸிலே என்ன தாளிக்கிறாங்களோ அதை நீதான் அழணும்'' என்றான்.

இன்னும் பலர் சிரித்தார்கள்.

கிழவன் பயத்தில் நடுநடுங்கிப் போனான்.

''மிஸ்டர்! உங்க கிண்டலை உங்களோடே வைச்சுக்குங்க'' என்ற ஹரிணி, கைப்பையிலிருந்து ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்தாள்.

''நான் பத்து ரூபாயெல்லாம் வாங்கிக்கிறதில்லே... என் ஃபீஸ் நூறு ரூபாய்!'' என்றான் ரமணி.

கோபத்தில் அவளுடைய கண்களில் நீர் துளித்தது.

பத்து ரூபாய் நோட்டை அருகே நின்று கொண்டிருந்த கிழவனிடம் நீட்டினாள்.

''அதை வாங்காதே... அம்மா பணத்தை நீட்டறதிலிருந்து என்ன தெரியறது? தப்பு அவங்க மேலேதான்னுதானே... இதோ இத்தனை பேர் சாட்சி...!''

அவன் சொல்லி வாய் மூடுவதற்கு முன் பத்து ரூபாய் நோட்டை விளாம் பழக் கூடையில் வீசி எறிந்து விட்டு ஹரிணி காரில் ஏறி விட்டாள்.

''எங்கே புறப்படறீங்க...? போலீஸ் வர்ற வரைக்கும் நீங்க நகரக்கூடாது!'' என்றான் ரமணி.

''ஹூ ஆர் யூ?''

''கிழவனோட வக்கீல்...''

''நான்சென்ஸ்...''

''போலீஸ்கன்னு வெறும் நஷ்டஈடு அபராதத்தோட நிக்காது... ஒரு மாசமாவது உள்ளே இருக்க வேண்டும்!''

ஹரிணி சிரித்தாள்.

''நீங்க என்ன பிளாட்பாரத்திலே நின்னுண்டு கட்சிக்காரனைப் பிடிக்கிற வக்கீலா? இதுக்குக் கையிலே கயிற்றை எடுத்துண்டு நாய் பிடிக்கப் போகலாமே!''

''இப்ப நான் உங்களைப் பிடிக்க வரல்லே!''

''என்ன சொன்னீங்க?''

''இப்ப நான் உங்களைப் பிடிக்க வரலே... நாய்களை நான் நாலு பேருக்கு நடுவிலே பிடிக்கிறதில்லே...''

''யூ...யூ...யூ இம்பெர்ட்டினன்ட் ரோக்!''

''தாங்க் யூ மிஸ்டர்!''

சற்றைக்கெல்லாம் ஒரு சப்-இன்ஸ்பெக்டர் வந்தார்.

''நான் அட்வகேட் ராமையாவின் பெண் பெயர் ஹரிணி.''

''சந்தோஷம்மா, லைசென்சைக் காட்ட றீங்களா?'' என்றார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

# உங்கள் குடும்பத்திற்கு உற்சாகம் பொங்கும் ஆரோக்கியமும், அதிகப்படி சக்தியும் இதோ!

வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக், இன்றியமையாத 12 சேர்க்கைப் பொருள்கள் சமசீராக அடங்கப் பெற்ற டானிக்காகும். வளர்ச்சிக்கும், சக்திக்கும் விட்டமின்கள். இரத்த ஆரோக்கியத்திற்கு, இரும்புச் சத்து பசியைத் தூண்டுவதற்கான ஊக்கப் பொருள்கள். தவிர, அது அருமையான சுவையுமுடையது.

உங்கள் குடும்பத்திற்கு வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் வாங்குங்கள். இப்பொழுதே.

மஞ்சள் லேபிளை நாடுங்கள்




## வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்

குடும்பம் முழுவதற்கும் பரிபூரணமான டானிக்

Grant.11 TM

# இருசுவை ஒன்றிலே இணைந்த





## காட்பரிஸ்
## சாக்கலேட் எக்லேர்ஸ்




குழந்தைகள்
விரும்பித் தேடும்,
பெரியோர் மனமும்
நாடும்!

காரமல் மூடிய
ஊட்டச்சத்து நிறைந்த
மில்க் சாக்கலேட்

C-2 TAM

''லேர்னர் லைசென்ஸ் போன வாரம்தான் எக்ஸ்பயர் ஆச்சு.''

''காலாவதி ஆயிட்டதுன்னு சொல்லு...'' என்றான் ரமணி.

அவனை லட்சியம் செய்யாமல், ''வண்டி இங்கேயே இருக்கட்டும்... ஏய் கிழவா.. பழத்தை யெல்லாம் எடுத்துக் கூடையிலே போடு சீக்கிரம்'' என்றார் சப் இன்ஸ்பெக்டர். பிறகு, ''நீங்க ஸ்டேஷனுக்கு வாங்கம்மா... லைசென்ஸ் இல்லே, 'எல்' போர்டும் இல்லே'' என்றார்.

''நான் அட்வகேட் ராமையாவின் பெண்'' என்றாள் ஹரிணி. அவள் முகம் சிவந்தது.

''ராமையா பெண் லைசென்சு இல்லாம கார் ஓட்டலாம்னு இன்னும் சட்டம் வரலே அம்மா!''

''ஒரு மூணு நாள் டைம் கொடுத்தா சட்டசபையிலே சட்டம் நிறைவேறிடும். இவர் யார் பெண்? ராமையா பெண்!'' என்றான் ரமணி.

''வண்டியிலேயே போகலாம்'' என்றாள் ஹரிணி, ரமணியை விரைத்துப் பார்த்துக் கொண்டே.

''முடியாதும்மா. உங்க கிட்டே லைசென்சு இல்லே. நீங்க ஓட்டக் கூடாது!''

சப் இன்ஸ்பெக்டர் கூறி முடித்ததும் ரமணி கிழவனை அருகே அழைத்தான்.

''எத்தனை ரூபாய்க்கு இன்னிக்கு விளாம் பழம் எடுத்தே?''

''பன்னண்டு ரூபாய்க்கு.''

''இந்தா.''

''என்னங்க?''

''இருபத்தைஞ்சு ரூபா... பேசாமல் போ. நான் அம்மாவைக் கவனிச்சுக்கறேன்.''

''என்னாலே போலீஸ் ஸ்டேஷனுக்கு வர முடியாதுங்க.''

''வெத்தலே பாக்கு வைச்சு உன்னை யாரும் கூப்பிடலே... உங்கிட்டேதான் லைசென்ஸ் இருக்கே, தெருவிலே நடக்க... போ... உம், ஜல்தி!''

''என்ன மிஸ்டர் இது?'' என்று கேட்டார் சப் இன்ஸ்பெக்டர்.

''மிஸ் ஹரிணி... மிஸ்தானே?... பத்து ரூபாயைக் கூடையிலே போட்டா. அது அநாகரிகமாகப் பட்டது. அதனாலே இரு பத்தைஞ்சா கையிலே கொடுத்தேன்.''

''சட்டத்துக்கு விரோதம்.''

''டி.ஐ.ஜி. உத்தமபாளையத்துக்கு காம்ப் போயிருந்தாரே. வந்தாச்சா? வந்ததும் எனக்கு போன் பண்றேன்னார். இன்னிக்குச் சாயந்திரம் எங்க வீட்டிலே ஒரு சின்ன பார்ட்டி.''

''அதெல்லாம் எனக்குத்தெரியாது. சார்!''

''உங்க இன்ஸ்பெக்டர் யாரு. அமிர்தலிங்கம்தானே?''

''இல்லே. கேசவன் நாயர்.''

''ஓ, நம்ம கேசவனு... போன வருஷம் ஐயப்பன் பூஜையை எங்க வீட்டிலேதான் நடத்தணும்னு கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். நான் மாலே போட்டுக்கல்லே... ஆனா கேசவன் போட்டுண்டான்... அது சரி, உங்க டெப்டி வராகம்பிள்ளையோட டிரான்ஸ்பர் கான்சலாச்சா, இல்லையா? நான் ஏற்கனவே மெட்ராசுக்குப் போன் பண்ணியாச்சு.''

சப் இன்ஸ்பெக்டர் விழித்தார்.

''நீங்க யாரனே தெரியாது எனக்கு.''

''அதனாலென்ன, உங்களை மன்னிக்கிறேன். உங்க டி. ஐ. ஜி., சுப்ரண்டு, டெப்டி, இன்ஸ்பெக்டர் அவ்வளவு பேருக்கும் என்னைத் தெரியும். ப்ளூ கிராஸ் பிரஸிடெண்ட் சாவித்திரியின் பிள்ளைன்னு சொல்லுங்க... என் பெயர் ரமணி. பி.ஏ. பி.எல்., அட்வகேட்.''

''சரிங்க'' என்ற சப் இன்ஸ்பெக்டர், ஹரிணி பக்கம் திரும்பினார். அவள் காரின் மேல் சாய்ந்தவளாய் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு நின்று கொண்டிருந்தாள். இப்போது ரமணியைப் பார்த்து ஆத்திரப்படுவதா அல்லது மகிழ்ந்து கொள்ளுவதா என்று புரியவில்லை.

''நீங்க வாங்கம்மா ஸ்டேஷனுக்கு!'' என்றார் சப் இன்ஸ்பெக்டர்.

''இன்னமே எதுக்கு ஸ்டேஷன்? கிழவன் போயாச்சு... நானும் உங்க டிபார்ட்மெண்ட் ஆபீஸர்களைப் பத்தி யெல்லாம் விசாரிச்சாச்சு.''

கூட்டம் கலைந்து விட்டது. சப் இன்ஸ்பெக்டர் முகம் வியர்த்தது.

''இப்பத்தான் போலீஸ் ஃபோர்ஸிலே ஜாயின் பண்ணி யிருக்கீங்களாக்கும். வேலூர் டிரெயினிங்...மிஸ் ஹரிணி, காரிலே ஏறுங்க, போகலாம்.''

''மிஸ்டர் ரமணி...''

''இன்ஸ்பெக்டர், நீங்க ரெண்டு மூணு வருஷத்திலே இன்ஸ்பெக்டராகப் போறீங்க. இப்பவே 'ஸைட்'டை எடுத்திட்டேன்...,ஹரிணி போவோமா?''

சப்-இன்ஸ்பெக்டருக்குத் தலை சுற்றியது.

''ஏன் சார், மொதல்லே நீங்க கிழவன் பக்கம் பேசினீங்க... இப்போ...''

''கிழவன்தான் போயாச்சே.''

ரமணி சிரித்தான். பிறகு, ''வக்கீல் ராமையாவின் பெண் மேலே கேஸ்னு, உங்களை முதல்லே டிரான்ஸ்ஃபர் பண்ணிடுவாங்க... நான் கவனிச்சுக்கிறேன்'' என்றான்.

சொன்னவன் பதிலுக்கும் காத்திராமல் நேரே காருக்கு விரைந்து கார்க் கதவைத் திறந்து உட்கார்ந்தான்.

''ஹரிணி, ஏறுங்க.''

''நீங்க எதுக்கு உட்கார்றீங்க... அதுவும் டிரைவர் சீட்டிலே?''

''வண்டியை ஓட்டத்தான்.''

''என்ன?''

''உங்க கிட்டே லைசென்ஸ் இல்லே... கம் ஆன்... நான் உங்க வீட்டிலே உங்களையும் காரையும் சேர்த்திடறேன்.''

அவள் பதில் பேசுமுன் ஸ்டார்ட் செய்து கியரையும் அவன் போட்டு விட்டான். எப்படியாவது இந்த இடத்தை விட்டுப் போனால் போதும் என்றிருந்த ஹரிணி, கதவைப் 'படீர்' என்று சாத்தினாள்.

சில நிமிடங்களில் படகு நீரில் மிதப்பது போல் கார் மிதந்து சென்றது.

''இவ்வளவு அழகா கார் ஓட்டறீங்க, ஏன் பிளாட்பாரத்திலே நின்னுண்டிருந்தீங்க?''





''டிரைவர் வேலைக்குப் போவதுதா னேன்னு கேட்கிறீங்களா?''

''நோ... நோ... நீங்க சாவித்திரி பின் னாலே வீட்டிலே கார் இருக்குமேன்னு கேட்டேன்.''

''நான் அம்மா வண்டியை உபயோகிக்கிற தில்லே. லட்ச ரூபாய் வண்டி இருக்கிறப்போ, எதுக்கு அம்மா வண்டி?''

''என்ன சொல்றீங்க?''

''பஸ். பஸ் இருக்கே?''

''மொதல்லே உங்களை நான் ஹேட் பண் ணினேன். உங்க இடக்கும் நெக்கலும் வெறுப்பா இருந்தது.''

''அப்ப, இப்ப ஹேட் பண்ணலையாக்கும்.''

''நீங்கதான் என்னைப் போலீஸ் ஸ்டேஷ னுக்குப் போகாமக் காப்பாத்திட்டீங்களே.''

''ஒரு சின்ன வேண்டுகோள்!''

''என்ன?''

''இப்படி இக்கட்டான நிலையிலிருந்து நான் உங்களைக் காப்பாத்தினதுக்காகத் தயை செய்து என்னை 'லவ்' மட்டும் பண்ணுறீங்க.''

ஹரிணி சிரித்தாள்.

''லவ்னு அவ்வளவு சீப்பா?''

''சீப்போ கண்ணுடியோ எனக்குத் தெரியாது.... நீங்க என்னை 'லவ்' பண்ணி னுலும் என்னுலே எதிர் லவ் பண்ண முடி யாது. ஏன்னு கேட்கிறீங்களா? கேளுங்க...''

''ஏன்?''

''நீங்க என்னுடைய குருநாதருடைய பெண்.''

''என் அப்பா உங்களுக்குக் குருவா? எனக் குத் தெரியவே தெரியாதே.''

''அவருக்கே தெரியாதே!''

''என்ன உளர்றீங்க?''

''அவர் துரோணர். நான் ஏகலைவன். கட்டை விரலைக் கேட்டா நான் தரத் தயார். வக்கீலுக்கு எதுக்குக் கட்டை விரல்? கறுப்புக் கோட்டுதானே முக்கியம்?''

ஹரிணி சிரித்தாள்.

''தயை பண்ணிச் சிரிக்க மறுப்பாதீங்க... நான் உங்களை ஓர் இக்கட்டான நிலையி லிருந்து காப்பாத்தி யிருக்கேன். கைம்மாறு ஒண்ணே ஒண்ணு தாருங்க.''

''என்ன?''

''உங்க அப்பாகிட்டே எப்படியாவது சொல்லி, என்னை ஜூனியராக வைக்கக்கச் சொல்லுங்க.''

''பூ! இது என்ன பிரமாதம்? இன்னிக்கே ஏற்பாடு பண்ணிடறேன்.''

''தாங்க்ஸ்.''

''நீங்க ஜூனியராக வந்தா எனக்கும் நல்லது.''

''ஏன், இப்படிப்பேசிண்டுஇருக்கலாம்னு?''

''நோ நோ... அவசியம் நேர்றப்போ கார் ஓட்டச் சொல்லலாமே!''

● ● ●

**ம**றுநாள் அவன் ராமையாவின் ஏழாவது ஜூனியரானுன்.

இன்று ஜூனியர்களில் முதன்மை ஸ்தா னம் வகிக்கிறுன். அவனும் ஹரிணியும் மனம் விட்டுப் பேசி ஒரு முடிவுக்கு வந்தார்கள்.

இருவரும் வெறும் சிநேகிதர்களாகவே இருக்க வேண்டியது. அழகரே திருமணத் துக்கு வருவதாகச் சொன்னுலும் கூட, தம்பதியாக மாறுவதில்லே.

அவர்களிடையே நட்பு நன்ருகவே வளர்ந் தது.

(தொடரும்)

---

சின்னஞ் சிறு சிறுமிகளுக்குத் திருமணம் செய்து வைப்பதை அந்தக் காலத்தில் 'மரப்பாச்சிக் கல்யாணம்' என்பார்கள். தருண் மஜும்தார் இயக்கி, சக்தி ஸாமந்தா தயாரித்துள்ள மரப் பாச்சிக் கல்யாணக் கதைதான் ''குழந்தை மருமகள்'' என் னும் பொருள் தரும் 'பாலிகா பது'. இதில் பால்ய விவாகத் தின் கேடுகள் எதுவும் சித்திரிக் கப்படவில்லை; அறியாப் பெண் அறியும் பருவம் அடையும் வரையில் உள்ள நிகழ்ச்சிகள் அருமையாகச் சித்திரிக்கப்பட் டுள்ளன. கருக்கச் சொல்லப் போனுல் கதை இல்லாமலே கதை பண்ணி முழுப் படமாக இயக்கி அலுக்காமல் முடித் திருக்கிருர்கள். ஐம்பது ஆண்டு களுக்கு முன் நிகழ்ந்ததாகக் காட்டப்படும் கதையில், விடுதலைப் போருக்கும் இடம் அளித்துக் கதையை நீட்டியிருக்கிருர்கள்.

மணமகளுக்கு அக்காளும் அக்காள் புருஷனுமாக வரும் அஸ்ராணி கஜ்ரீ குப்தா ஜோடி நேர்த்தியான முறையில் நகைச் சுவை பெருக்கி யிருக்கிருர்கள்.

சசின் அடக்கமும் ஆசையும் வெட்கமும், தாபமும் கொண்ட கதாநாயகனாக நடிப்பை நடிப் பாக்காமல் நடித்துக் காட்டியிருக் கிருர். புது முகம் ரஜனிசர்மா அறியாத இளங் கன்ருக வந்து நடிப்புக்கு இயல்பிலக் கணம் கூட்டி யிருக்கிருர். மொட்டு மலரக் கோனார்க் சிற்பங்கள் எப்படி உதவுகின்றன என்பதைக் காட்டும் முறை இயக் குநரத் திறமைக்குச் சான்று என் ருல் ஆர். டி. பர்மனின் இசைப் புலமையும் நந்து பட்டாச்சாரியா வின் காமிராப் புலமையும் தத் தம் துறைக்குச் சான்று. ரா.வீ.





ஸ்பென்ஸர்
உங்களுக்கு அளிக்கிறது!
புத்தம் புதிய மாடலில்
விசேஷ அம்சம் கொண்ட
புதுரக கெல்விநேட்டர்!
உள்ளே தேங்கியிருக்கும்
நீரைத்தானாகவே
வெளியே வடித்தெடுக்கும்
விசேஷ அம்சம் கொண்ட
புது ரக கெல்விநேட்டர்
பிரிட்ஜில் நீங்கள் செய்ய
வேண்டியது என்ன தெரியுமா?



ஒரு பட்டனை அழுத்த வேண்டியது தான்; உடனே உள்ளே தேங்கியுள்ள நீர் தானாகவே வெளியே அப்புறப்படுத்தப் பட்டுவிடும். இதன் கொள்ளளவு 286 லிட்டர்.

இந்த மாடலின் கெல்விநேட்டரின் விசேஷ அம்சம் ஒரு பித்தானை அழுத்தியவுடன் தானாகவே இயங்கி உள்ளே தேங்கியிருக்கும் நீரை வெளியே வடித்தெடுக்கக் கூடியது. தெர்மோஸ்டாட்டுக்கு நடுவில் உள்ள சிவப்பு பொத்தானை அழுத்தியவுடன் நீரை வெளியே அப்புறப்படுத்தும் சுழற்சி ஆரம்பமாகிறது. அதன் இயல்பிலேயே அமைந்துள்ள வடிகால்முறை உருகிய ஐஸ் கட்டி நீரை, பிரிட்ஜில் அடிப் பாகத்திலுள்ள ஒரு தட்டுக்கு அப்புறப்படுத்துகிறது. பின்னர் தட்டிலிருந்து நீரை வெளியேற்றுவது மிகவும் சுலபம். சாதாரண வெப்பதட்ப நிலையில் அந்த நீர் தானாக ஆவியாகி வெளியேறிவிடும். இல்லையென்றால், தட்டை சுலபமாக வெளியே இழுத்து நீரைக்கொட்டி விடலாம்.

உருகிய ஐஸ்கட்டி நீர் வெளியேற்றப்பட்டவுடன் ரெப்ரிஜிரேட்டர் மீண்டும் தன்னுடைய மாமூலான வேலையை ஆரம்பிக்கிறது.

286 லிட்டர் கொள்ளளவு கொண்ட, இந்தப் புதிய ரக கெல்விநேட்டரில் உள்ளிருக்கும் பொருள்களை வெளியே எடுத்து வைக்காமலேயே தானாகவே இயங்கி நீரை அப்புறப்படுத்துவதன் மூலம் இல்லத்தரசிகளுக்கு எவ்வித சிரமமும் கிடையாது. அவ்வாறு தானாகவே இயங்கி நீரை வெளியேற்றும்போது பிரிட்ஜுக்குள்ளே வைக்கப்பட்டிருக்கும் பொருள்களை கெடாமல் பாதுகாப்பதற்கு வேண்டிய சீதோஷ்ண நிலையையும் போதுமான அளவில் பராமரிக்கிறது.

பிரிட்ஜில் தேங்கிய நீரை அது தானாகவே வெளியே வடித்தெடுப்பதானது உங்கள் விரல் நுனிகளில் அடங்கியுள்ளது. இதுதான் கெல்விநேட்டரின் மிக சிறந்த அம்சம்.

உங்களுக்கு அருகாமையிலுள்ள ஸ்பென்ஸர் ஷோரூமிலோ அல்லது டீலர்களிடமோ சென்று இந்த புத்தம் புதிய ரக கெல்விநேட்டரை பாருங்கள்.

## கெல்விநேட்டர்
## ஸ்பென்ஸர்ஸ்

1865லிருந்து சேவையுடன் கூடிய வாழ்க்கையிலே எங்களது உன்னத மரபு.

ஸ்பென்ஸர்ஸ் அண்டு கம்பெனி லிட்.,

153, மௌண்ட் ரோடு,
சென்னை-600 002

19A, அலிபூர் ரோடு,
டெல்லி-110054.

ஸ்பென்ஸர்ஸ் பில்டிங்,
போர்ஜெட் தெரு,
பம்பாய்-400 0363

70, டையமண்ட் ஹார்பர் ரோடு,
கிட்டர்பூர், கல்கத்தா-700023.

SC 799 T




# செய்யாத தவறு



**ஆர். ஆதித்யன்**

சர்மாவுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. படுக்கையில் புரண்டு புரண்டு படுத்தார். பக்கத்தில் வைத்திருந்த வெண்கலக் கூஜாவிலிருந்து கொஞ்சம் தண்ணீர் எடுத்துக் குடித்தார். வெளியே தாழ்வாரத்தில் நிலா வெளிச்சத்தில் கொஞ்சம் நின்று யோசித்துப் பார்த்தார். அவரால் ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை.

அவர் தம் மனத்தில் போராடிக் கொண்டிருந்த பிரச்னை மிகவும் பெரியது. தம் மனச்சாட்சி, தாம் ஒரு தவறும் செய்யவில்லை என்று தெளிவாக இருக்கும்போது, தாம் செய்யாத ஒரு குற்றத்துக்காகத் தண்டனையை ஏற்று, மானம் மரியாதை குலைந்து, குடும்பத்தை நட்டாற்றில் தவிக்க விட்டு, தம் முடிவைத் தாமே தேடிக் கொள்வதா, அல்லது உயிருடன் இருந்து, கஷ்டங்களை அனுபவிப்பதா என்ற கேள்வியுடன் ஒரு வாரமாகவே அவர் உழம்பிக்கொண்டிருந்தார்.

''மிஸ்டர் சர்மா! நீர் எது செய்வீரோ, என்ன செய்வீரோ, எனக்குத் தெரியாது. இருபது வருஷங்களாக நீங்களும் உண்மையாகத்தான் உழைத்திருக்கிறீர்கள். இந்தக் கம்பெனியும் ஓர் அப்பழுக்கு இல்லாமல் நேர்மையுடன் நல்ல பெயர் எடுத்திருக்கிறது. அதற்கு இப்படி ஒரு களங்கம் ஏற்படுத்த நான் தயாராக இல்லை. நாளைக்குள் ஆடிட்டர்கள் திருப்திப்படும்படி நீர் அவர்களுக்குச் சமாதானம் சொல்ல முடியாவிட்டால், நான் போலீஸுக்குத் தகவல் கொடுத்தே ஆக வேண்டும். இதற்காக நான் மிகவும் வருந்துகிறேன். ஆனால் இதைத் தவிர நான் செய்யக் கூடியது வேறு ஒன்றும் இல்லை'' என்று அன்று சாயங்காலம் மானேஜிங் டைரக்டர் தீர்மானமாகக் கூறிவிட்டார்.

ஒரு வாரமாகவே உழம்பிக் கொண்டிருந்த சர்மா அசந்து விட்டார். கணக்குகளில் தப்பு ஏற்பட்டது என்னவோ உண்மை. அது எப்படி நேர்ந்தது என்று அவரால் கூற முடியவில்லை. சந்தர்ப்பச் சூழ்நிலையால் அவரேதான் ஐயாயிரம் ரூபாய்களைக் கையாடிவிட்டதாக ஆடிட்டர்கள் நம்பும்படி இருந்தது.

இரண்டு வருஷங்களுக்கு ஒருமுறை நடக்கும் ஆடிட் அது. அதில் எப்போதும் சர்மாவின் இருபது வருஷ சர்வீஸில் நற்பெயரும் நன்மதிப்பும்தான் வரும். ஆடிட் ரிப்போர்ட்களிலும் அவரைப் பற்றி விசேஷமாகக் குறிப்புக்கள் இருக்கும். ஆனால் இந்த வருஷம் என்னமோ நிலைமை முற்றிலும் மாறிவிட்டது. முதல் நாள் ஆடிட்டிலேயே தலைமை ஆடிட்டர் அவரைக் கூப்பிட்டு, ''எல்லா ரிகார்டுகளையும் அவைகளுக்கு ஆதாரமான 'வவுச்சர்'களையும் கொண்டு வாருங்கள்'' என்றதுமே அவர் திடுக்கிட்டு அசந்து விட்டார். என்னமோ பெரிய தவறு நேர்ந்து விட்டது என்று மட்டும் அவரால் ஊகிக்க முடிந்தது. விஷயம் என்ன என்று அவருக்குப் புரியவில்லை.

இரண்டு மூன்று நாட்களில் ஆடிட்டர் அத்தனை தஸ்தாவேஜுக்களையும் புரட்டோ புரட்டென்று புரட்டி எடுத்து விட்டார். இதற்குள் விஷயம் ஆபீஸ் முழுதும் பரவி விட்டது. அநேக வதந்திகள் அநேக விதமாக 'உணவு வேளையில்' விசுவரூபம் எடுத்தன.

''ஆள் பார்த்தால், விபூதிப் பட்டையும் சந்தனப் பொட்டுமாக, சிவபக்தன் வேஷம் போடுகிறார். பத்தாயிரம் ரூபாயை ஒரே யடியாக அமுக்கி விட்டாராம். போட்டாலும் நன்றாகப் பார்த்துப் பெரிய போடாகத்

தான் போட்டிருக்கிறார்'' என்று ரசித்தார் முதல் கிளார்க் கோபாலன். சர்மா ஹெட் கிளார்க். அவர் போனால் அவர் இடத்தில் பிரமோஷன் எதிர்பார்த்திருப்பவர் இந்தக் கோபாலன்.

''எந்தப் புற்றில் எந்தப் பாம்போ! இந்தக் காலத்தில் யாரையும் நம்ப முடியவில்லை. ஆனாலும் இவருக்கு இவ்வளவு தைரியம் இருக்க முடியும் என்று என்னால் நம்ப முடியவில்லை'' என்றார் டைப்பிஸ்ட் நாகராஜ ராவ், காப்பியை ஆற்றிக் கொண்டே.

''நமக்கு ஏன்யா இந்த வம்பு? இது பெரிய விஷயம். காலைச் சுற்றின பாம்பு நம்மைக் கடிக்காமல் விட்டால் போதும்'' என்று விசாரப்பட்டார் காஷியர் சக்கரபாணி. அவர் எப்போதுமே விசாரப்படும் சந்தேகப்பிராணி.

''சர்மா வருகிறார்... சர்மா வருகிறார்...'' என்று பல குரல்கள் கிளம்பின. 'லஞ்ச் ரூ'மில் ஒரு திடீர் அமைதி. எல்லோரும் தம் தம் பிளேட்டுகளிலேயே கண்ணைக் குத்தியவாறு முனைந்திருந்தார்கள். அந்த அமைதி சர்மாவை இன்னும் என்னவோ செய்தது. தம்மைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தனர் என்று அவருக்குப் புரிய நாழியாகவில்லை.

''சார்! உங்களை மானேஜிங் டைரக்டர் அறையில் ஆடிட்டர் கூப்பிடுகிறார்'' என்று பியூன் சொன்னவுடனேயே சர்மா விலவிலத்துப் போய் விட்டார். உடம்பெல்லாம் அவருக்கு வியர்க்க ஆரம்பித்து விட்டது. எப்படியோ சுதாரித்துக் கொண்டு உள்ளே போக ஆரம்பித்தார்.

''வாருங்கள், சர்மா! உட்காருங்கள்'' என்று மானேஜிங் டைரக்டர் மரியாதை கொடுத்து அவரை அழைத்தவுடனேயே, ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது என்று அவர் உள்ளுணர்வு உணர்த்தியது.

''மிஸ்டர் சர்மா! உங்களை வீணாகக் காபராப்படுத்த நான் விரும்பவில்லை. ஆனால் ஆடிட்டில் அகப்பட்ட விஷயத்துக்குப் பதில் கூறவேண்டிய பொறுப்பு உங்களிடம் இருக்கிறது'' என்ற பீடிகையுடன் ஆடிட்டர் ஆரம்பித்தார்.

''இங்கே பாருங்கள்! போன செப்டம்பரில் ரூபாய் ஐயாயிரம் செலவு செய்யப்பட்டதாகக் கணக்கில் இருக்கிறது. எதற்கு என்று பார்த்தால், விவரம் இல்லாமல் 'சஸ்பென்ஸ் வவுச்சரில்' கணக்கு எழுதி இருக்கிறது. இதற்கு 'டீடெய்ல்டு வௌச்சரில்' முப்பது கார் பாட்டரிகள் வாங்கினதாக இருக்கிறது. கார் பாட்டரி ஸ்டாக்கில் முப்பது பாட்டரி 'க்ரெடிட்' ஆகியிருக்கிறது. நார்மலாக இந்த 'டிரான்ஸாக்ஷன்' இதோடு முடிந்து விடும். ஆனால், 'ஸ்டாக் அக்கௌண்ட்'ஸை செக் பண்ணின 'ஆடிட் கிளார்க்' 'டீடெய்ல்டு செக்குக்காக' அந்தப் பக்கத்தையே எடுத்துக் கொண்டது உமது துரதிர்ஷ்டம். 'ஸ்டாக் அக்கௌண்ட்' பக்க



ஆரம்பத்தில் 'ப்ராட் பார்வர்டு' காலத்தில், முந்தின பக்கம் 'கேரி பார்வர்டு' ஸ்டாக்கில் சரியாக முப்பது குறைத்து எழுதப்பட்டிருக்கிறது. ஆகக் கூடி 'ஸஸ்பென்ஸ் வௌச்ச'ரில் வாங்கினதாக எழுதப்பட்ட முப்பது பாட்டரிகளையும் 'க்ரெடிட்' செய்த பிறகும்,

பழைய ஸ்டாக்கே இருக்கிறது. ஆகையால் 'ஸ்டாக் வெரிபிகேஷ'னில் தெரியாமல் போய் விட்டது. மிகவும் புத்திசாலித்தனமாகத் திட்டமிட்டுச் செய்யப்பட்ட திருட்டு இது. இது வெறும் 'காஷ் ஷார்டேஜ்'ஆக இருந்தால் ரூபாய் ஐயாயிரத்தை நீங்கள் கட்டி விட்டால் நாங்கள் விட்டுவிடுவோம். மிகவும் சாமர்த்தியமாக 'அக்கௌண்ட் ப்ரோஸீஜர்' நன்கு அத்துபடியான ஆசாமியால் ஜாக்கிரதையாகச் செய்யப்பட்ட திருட்டான தால், இது 'ஃப்ராட், சீடிங்' கேஸ். போலீஸுக்குத் தெரியப்படுத்துவது எங்கள் கடமை. அதைச் செய்வதற்கு முன்னால் உங்கள் 'எக்ஸ்பிளனேஷன்' ஏதாவது இருந்தால் கூறலாம்'' என்று ஆடிட்டர் முடித்தவுடனேயே சர்மா வெலவெலத்துப்போய் 'உண்டு இல்லே' என்று ஆகிவிட்டார்.

அடுத்த சில தினங்களில் ஆடிட்டர் துளைத்துத் துளைத்துக் கேட்ட கேள்விகளுக்குக் கோவையாகப் பதில் சொல்ல முடியாமல் கிட்டத்தட்ட உளறும்படி ஆயிற்று. இரண்டு மூன்று தினங்கள் ஆக ஆக நாடி நரம்பெல்லாம் இற்று விழுந்து விட்டது சர்மாவுக்கு. 'சட்டம்', 'குற்றம்' இந்த வார்த்தைகள் அவரைப் பொறி கலங்க வைத்தன.

ஒரு வாரமாக மண்டையை உடைத்துக் கொண்டும் அவருக்கு ஒன்றும் புரியவில்லை. ''ஹே வேங்கடாசலபதி! இந்தப் பாவியை, ஒரு பாபமும் அறியாத இந்தப் பாவியைக் காத்து ரட்சிப்பாய்!'' என்று வாய் விட்டுப் புலம்பவே ஆரம்பித்து விட்டார்.

மானேஜிங் டைரக்டர் கொடுத்த கெடு அன்று சாயங்காலத்துடன் தீர்ந்து விட்டது. சர்மாவுக்கு ஒன்றும் புரியவில்லை. நாளை சாயங்காலம் சூரியாஸ்தமனத்துக்குள் அவர் ஜெயிலில் இருப்பார். இத்தனை நாட்களாக நாணயமாக உழைத்தவன் என்ற பெயர் போய், 'சாமர்த்தியமான திருடன்' என்ற பட்டத்துடன் ஐந்து ஆறு வருஷங்கள் ஜெயிலில் கழிக்க வேண்டும். தன் குடும்பம் நிர்க்கதியாகித் தவிக்க வேண்டும். இதைத் தவிர்ப்பதற்கு ஒரே ஒரு வழிதான் அவருக்குத் தென்பட்டது. தான் எங்கோ எப்போதோ படித்த ஒரு வரி ஞாபகத்துக்கு வந்தது.

''மானமிழந்து உயிர் வாழ்வதை விடப் பிராணன் பெரிதல்ல''.

'ஆத்ம ஹத்தி செய்து கொள்வது பாப மல்லவா?' என்று அவர் மனச் சாட்சி உறுத்தியது. ' அது நமக்கு உயிரை இயம்பிய ஈசுவரனுக்குத் துரோகம் செய்வதாகாதா?' என்றும் அவர் அறிவு கூறிற்று.

'ஆனால் செய்யாத குற்றத்தை இப்படி என் தலையில் போட்டு ஈசுவரன் விளையாடுகிறானே, அது அவனுக்குத் தகுமா? தகும் என்றால் நான் ஆத்மஹத்தி செய்துகொள்வதில் தப்பு இல்லே' என்று அவர் மனம் வாதித்தது.

சர்மா ஒரு சாதாரண மத்தியதரக் குடும்பத்தைச் சேர்ந்தவர். செகந்தராபாத்தில் இருக்கும் ஒரு மோட்டார் கம்பெனியில், ஒரு குமாஸ்தாவாகச் சேர்ந்து, நாணயத்தாலும், கடும் உழைப்பாலும் இருபது வருஷ சேவைக்குப் பிறகு தலைமைக் குமாஸ்தாவானவர். கம்பெனிக்குப் பக்கத்திலுள்ள வட்டாரத்தில் ஒரு சின்ன வீட்டில் வசித்து வந்தார். இரண்டு குழந்தைகள். மூத்தவன் ராமு, ஏழெட்டு மாதங்களுக்கு முந்தி வடக்கே வேலை தேடிப் போனவன். பிறகு கடிதமே இல்லே. இரண்டாம் பையன் ஜூனியர் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். அவரும் அவர் மனைவியும் இரு குழந்தைகளும் கிடைக்கும் சம்பளத்தில் நிம்மதியாகக் காலட்சேபம் செய்து வந்தார்கள். வயிற்றுப் பிழைப்புக்காக அந்தக் கம்பெனியில் சேர்ந்

---

[illegible]



[illegible]






இத் தலைப்புக் கொண்ட படத்தைப் பார்க்கும்
சிலர் அழுவார்;
சிலர் அவதியுறுவார்!
சிலர் சிரிப்பார்;
சிலர் சீறுவார்!

'இன்னு செய்தாரை
ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்'

என்னும் வள்ளுவர் வாக்கோடு முடியும் படத்தைப் பார்த்து—விமரிசகர் வள்ளுவரை வாழ்த்தி விமரிசனத்திலிருந்து தப்பி மகிழ்வார்!

— ரா. வீ.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

நவர் வேறு இடங்களில் பெரிய வேலைக்கு முயற்சி பண்ணக்கூடத் தெரியாத அப்பாவி. நிர்வாகத்துக்கு உயிர் நாடியான கணக்கு இலாகாவுக்கு அவரை 'ஹெட்'டாகப் போட்டிருந்தார்கள்.

"ஏதோ கம்பெனி ஓடுகிறது. அதில் வருமானமும் உண்டு, செலவும் உண்டு. வரவு செலவு எழுத வேண்டியதுதானே?" என்று அந்த இலாகாவை எடுத்துக் கொண்டார். இப்படிப் பண மோசடி விவகாரத்தில் சிக்கிக் கொள்ளப் போகிறோம் என்று அவர் கனவு கூடக் கண்டதில்லை. தினமும் வேங்கடேசப் பெருமாளை வேண்டிக் கொண்டதன் பலன், இன்று உயிரை இழக்கவும் அவர் தயாராக இருக்கும்படியான எக்கச் சக்கத்தில் மாட்டி விட்டது.

அன்று சாயந்திரம் அவர் முடிவெடுத்தபடி மருந்து வாங்கி வந்திருந்தார். கடைசியாகத் தம் மனைவியையும், தம் இரண்டாம் பையனையும் ஆசை தீரப் பார்த்துவிட்டு நித்தம் நித்தம் வணங்கும் பெருமாளையும் கடைசியாக வணங்கினார். மருந்து கலந்த ஜலத்தைப் பருகிப் படுக்கையில் படுத்தார். வயிற்றை என்னமோ செய்தது. கைகால்கள் இழுக்க ஆரம்பித்தன.... உடம்பெல்லாம் ஒரே எரிச்சல்...மெல்ல மெல்ல அடங்கியது. அமைதி. நிலையான அமைதி!

சர்மா காரியம் முடிந்த மறுநாள் பத்திரிகையில் பின்வரும் செய்தி வந்திருந்தது.

"இன்று காலை குறிப்பிட்ட மோட்டார் கம்பெனியின் மானேஜிங் டைரக்டரும், கம்பெனியின் கணக்குகளை 'ஆடிட்' செய்ய வந்திருந்த ஆடிட்டரும் சென்று கொண்டிருந்த கார், ஒரு லாரியுடன் பலமாக மோதி விட்டபடியால், அங்கேயே அவர்கள் உயிர் துறந்ததற்கு வருந்துகிறோம். விபத்தில் கார் பெட்ரோல் டாங்கி தீப்பிடித்துக் கொண்டு, ஆடிட் ஆகிக் கொண்டிருந்த இரண்டு வருடரிக்கார்டுகளும் தீவிபத்தில் பற்றி எரிந்து சாம்பலாகி விட்டன. ஆகையால் லாப நஷ்டக் கணக்கோ பாலன்ஸ் ஷீட்டோ, ஆடிட் ரிப்போர்ட்டோ ஒன்றும் கொடுக்க இயலாத நிலையில் கம்பெனி இருக்கிறது.

"இதில் இன்னொரு துயரம் என்னவென்றால், கம்பெனி அக்கௌண்ட்களைப் பற்றித் தெரிந்திருந்த மற்ற ஒரே நபர், கம்பெனியின் ஹெட் கிளார்க் சர்மா, நேற்றுத்தான் ஏதோ குடும்பக் கஷ்டத்தால் தற்கொலை செய்துகொண்டு மாண்டார்."

அன்று தபாலில் சர்மா பேருக்கு ஒரு கவர் வந்தது. அதை அவர் மூத்த பையன் ராமு பம்பாயிலிருந்து எழுதியிருந்தான்.

"அன்புள்ள அப்பாவுக்கும் அம்மாவுக்கும் அநேக நமஸ்காரங்கள். நான் வேலை தேடி வடஇந்தியா சென்று ஏழெட்டு மாசங்களாகக் கடிதம் போடாததற்கு மன்னிக்கவும். வாழ்க்கையில் வெற்றி பெற்று உங்களைத் திமர் சந்தோஷத்தில் ஆழ்த்த ஆசைப்பட்டேன்.

"நான் ஊரை விட்டுப் புறப்படுவதற்கு முந்திச் செய்த ஒரு தவறுக்காக மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். எனக்கு ஒருவரிடம் கைகட்டி வேலை செய்ய விருப்பம் இல்லை. சொந்தமாக வியாபாரம் செய்ய ஆசைப்பட்டேன். இதற்கு மூலதனம் ரூபாய் ஐயாயிரம் குறைந்தபட்சம் தேவைப்பட்டது. இது அப்பாவிடம் இல்லவும் இல்லை. அவரும் புரட்டிக் கொடுக்கச் சாமர்த்தியம் இல்லாத அப்பாவி ஆதலால் என் வெற்றியில் எனக்கு இருந்த நம்பிக்கையில் நான் புறப்படும் தினம் அப்பா ஆபீஸில் ஆபீஸ் பணம் ரூபாய் ஐயாயிரம் எடுத்துக் கொண்டு, 'ஸஸ்பென்ஸ் வௌச்ச'ரில்' கணக்கு எழுதி, ஸ்டாக் அக்கௌண்டில் ஒரு சின்னத் திருத்தம் செய்து 'அட்ஜஸ்ட்' செய்து விட்டேன். இதை நான் கடனாகத்தான் பாவித்தேன். இதற்கு வட்டியாக மற்றும் ஐயாயிரம் சேர்த்து ரூபாய் பத்தாயிரத்துக்கு 'செக்' இத்துடன் அனுப்பியிருக்கிறேன். பெற்றுக் கொள்ளவும்.

இப்படிக்கு அன்புள்ள ராமு."

கூடத்தில் மாலை போட்டு மாட்டப்பட்டிருந்த சர்மாவின் படம் நிச்சலனமாகப் புன்னகையுடன் சிரித்தது!

# தெருவுக்கு ஒரு பிருந்தாவனம்!

○ பால பிருந்தாவன குழந்தைகள் நடத்திய லவகுசா நாடகம்.

○ இருபத்தைந்து வருடங்களாக முகம் கோணாமல் சலித்துக் கொள்ளாமல் குழந்தைகளைப் பார்த்துக் கொண்ட ஆயாவுக்கும் பரிசு. சாவித்திரி அம்மாள் மகிழ்கிறார்.

OXOXOXO X OXOXOXO

**ப**ல வருடங்களுக்கு முன்பு ராஜாஜி கல்கியில் ''தெருவுக்கு ஒரு பிருந்தாவனம்'' என்று ஒரு கட்டுரை எழுதினார். அவர் எழுதிய போது நாம் இன்று காணும் சூழ்நிலை இல்லை. தமக்கே உரிய தீர்க்க தரிசனத்துடன் அவர் குழந்தைக் கல்வியை வற்புறுத்தி எழுதினார்.

அதைப் படித்ததினால் தமிழ்நாட்டில் எத்தனை குழந்தைப் பள்ளிகள் தொடங்கப் பட்டன என்று யாரும் கணக்கெடுக்க முடியாது. ஆனால் சென்னை காந்தி நகரில் பால பிருந்தாவனம் என்ற பெயருடன் தொடங்கப் பட்ட குழந்தைகள் பள்ளி ராஜாஜி அவர்களுடைய கட்டுரையினால் ஏற்பட்ட நேரடியான பலன். இந்தப் பள்ளிக்கு அஸ்திவாரம் இட்டவரும் ராஜாஜியே.

சமீபத்தில் இந்தப் பால பிருந்தாவனம் வெள்ளி விழாக் கொண்டாடியது.

சிறு குழந்தைகளின் மன வளர்ச்சி அற்புதமானது. ஐந்து வயதுக்குள் ஏற்படுகிற மன வளர்ச்சி பின்னால் ஆயுட்காலம் முழுதும் கூட ஏற்படுவதில்லை. ஆறு வயதுக்குட்பட்ட குழந்தைகளைப் பார்த்துக் கொள்வதும் அவர்களுக்குக் கல்வியறிவூட்டுவதும் மிகவும் பொறுப்பான காரியமாகும்.

இந்தப் பொறுப்பு மிகுந்த சிறப்பான தொண்டைப் புரிந்து வரும் பால பிருந்தாவன நிர்வாகிகளும் குறிப்பாக ஸ்ரீமதி சாவித்திரி அம்மாளும் பாராட்டுக்குரியவர்கள்.

பாலபிருந்தாவனத்தின் ஆரம்ப காலத்தில் அதற்கு வேண்டிய உபகரணங்களோ விளையாட்டுச் சாமான்களோ அதிகமாகக் கிடையாது. நிர்வாகிகள் ஒவ்வொரு பொருளையும் யாசித்துப் பெற்று வந்தார்கள்.

ஒரு குழந்தையின் தாய் பள்ளி நடத்தப் படும் சிறந்த முறையைக் கண்டு மகிழ்ச்சியடைந்து தானாகவே தன் குழந்தையுடைய ஆடும் குதிரையைப் பள்ளிக்குப் பரிசாக அனுப்பி வைத்தாள்.

அன்று மாலை அந்த ஆடும் குதிரை திரும்பி வந்து விட்டது. அனுப்பி வைத்த தாயாருக்கு ஒன்றும் புரியவில்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் ஸ்ரீமதி சாவித்திரி அம்மாளும் வந்தார்.

''ஏன் அந்த ஆடும் குதிரையைத் திருப்பி அனுப்பி விட்டீர்கள்?'' என்று குழந்தையின் தாய் கேட்டாள்.

''அதைத் திருப்பி அனுப்பி விட்டேன் என்று வருத்தப்படாதீர்கள். உங்கள் குழந்தையுடையது அந்தக் குதிரை. அவன் வீட்டில் தன்னுடையதாக வைத்து விளையாடி வந்திருக்கிறான். பள்ளிக்கூடத்தில் எல்லாக் குழந்தைகளும் அதன் மீது உட்கார்ந்து விளையாடுவதைப் பார்க்கும்போது இந்தக் குழந்தையின் மனத்தில் பொறாமை உணர்ச்சி ஏற்படும். அது குழந்தைக்கு நல்லதல்ல. அவனுடைய பொருள் அவனிடம் தான் இருக்க வேண்டும்'' என்று சொல்லிச் சமாதானப் படுத்தினார் சாவித்திரி அம்மாள்.

குழந்தையின் மன நிலையைப் பெற்ற தாயாரைவிட நன்றாகப் புரிந்து கொண்டு அன்புடனும் அனுதாபத்துடனும் அணுகுபவர் அவர்.

சென்ற இருபத்தைந்து வருடங்களாக ஆடம்பரமில்லாமல் அடக்கமாகவும் அமைதியாகவும் பணியாற்றி வந்திருக்கிறார். ஸ்ரீமதி பாலம்மாள், ஸ்ரீமதி ருக்மிணி சம்பத் இருவரும் இந்தப் பள்ளியைத் தொடங்கிய காலத்தில் மிகவும் பாடுபட்டிருக்கிறார்கள்.

வெள்ளி விழா கொண்டாட்டத்தின் போது தலைமை வகித்துப் பேசிய ஸ்ரீ ரங்க பாஷ்யம் ஐ. ஏ. எஸ்., பள்ளி நிர்வாகிகளைப் பாராட்டினார்.

பள்ளிக் குழந்தைகள் நடத்திய கதம்ப நிகழ்ச்சி மிகவும் நன்றாக இருந்தது. பால பிருந்தாவனத்தின் சின்னச் சின்னக் கண்ணன்களுக்கும் கண்ணம்மாக்களுக்கும் நமது ஆசிகள்.

—ஆனந்தி

# அவன் பார்த்துப்பான்



''உங்கள் எல்லோருக்கும் என்னுடைய அனுதாபங்கள். உங்கள் கண் கண்ட சாட்சி விபத்திலே இறந்திட்டானுமே?''

## காட்சி 15

(இளமுருகு நிற்கிறான். சர்மா, சிவ ராமன், ஏழுமலை நாயுடு முதலியோர் இருக்கிறார்கள்.)

சிவரா: இளமுருகு! உண்மையைச் சொல். போன மாசம் அவுங்களோட பெங்களூர் போனியா?

இளமுருகு: நிச்சயமா நான் போகல்லே, சார். என்னை நம்புங்க சார்.

சிவரா: பொய் சொல்றதுனலே எந்தப் பலனும் இல்லே. நீ உண்மையைச் சொன்னு ஒரு பெண்ணுக்கு நீதி கிடைக்கும். அவுங்க ஏதாவது சொல்வார்களோன்னு பயமே உனக்கு வேண்டாம்.

இள: நிச்சயமா எனக்கு அந்தச் சம்பவத் தைப் பத்தித் தெரியாது, சார்.

ஏழுமலை: என்னைப் பார்த்துச் சொல்லு. பொய் சொன்னே, எலும்பெல்லாம் நொறுக்கிப் போடுவேன்... மோதிரத்தை என் கையிலே போட்டுட்டுப் போகலே?

சர்மா: இளமுருகு! பயப்படாமல் உண் மையைச் சொல்லு. கண்ணுக்கு நேர நடந்த அக்கிரமத்தைப் பார்த்துட்டு நாம வாயை மூடிக்கிட்டு இருந்துட்டா, நாம எல்லாம் மனிதர்களே இல்லேப்பா. ஆண் டவன் நம்மை மன்னிக்க மாட்டான்.

(இளமுருகு தயக்கம்.)

சிவரா: கல்யாணிக்கு நடந்த கொடுமையை நீ பார்த்தியா, இல்லையா?

கோமல் சுவாமிநாதன்

இள: நான் பார்க்கல்லே, நான் பார்க் கல்லே. என்னை விட்டுடுங்க சார்!

(தீபா வருகிறாள்)

தீபா: இளமுருகு.

இள: அம்மா... நீங்களுமா?

தீபா: இளமுருகு...! உண்மையைச் சொல்! ஊரிலே உனக்கும் ஒரு தங்கை இருக்கா, இல்லையா? அவளை நாலு முரட்டுப் பசங்க தூக்கிக் கிட்டுப் போய் இந்த நிலைக்கு ஆளாக்கி யிருந்தால் உன் மனசு எப்படித் துடிச்சிருக்கும்?

இள: தயவுசெய்து அப்படிச் சொல் லாதீங்கம்மா. நான் அவுங்க ளோட சுத்தறதே பணத்துக்கா கத்தான். அந்தப் பணத்தை நான் காலணு செலவு பண்ணற தில்லே. அப்படியே வைச்சிருக் கேன். என் தங்கையை நல்ல இடத்திலே கட்டிக் கொடுக்க ணும்கிற எண்ணத்திலே.....

சர்மா: அதற்காக, மனச்சாட் சியை விலே பேச மாட் டேன்னு நினைக்கிறேன்... அக் கிரமம் நடந்ததுன்னு, அதைச் சொல்ல வேண்டியது நம் கடமை அல்லவா?

ஏழு: மயிலே, மயிலே இறகு போடுன்னு போடுமா? அடி உதவுகிறாப் போல் அண் ணன் தம்பி கூட உதவ மாட்டான். என் னிடம் விடுங்க இவனை! உண்மையைக் கக்க வைக்கிறேன்!

தீபா: இளமுருகு...அவங்களுக்காகச் சொல்ல வேண்டாம். உன் தங்கச்சியா நின்னு நான் கேட்கிறேன். அந்தக் கல்யாணி! விதியை நொந்து வாழ்க்கை நடத் திக்கிட்டிருக்கிற சாதாரணப் பொண்ணு! அந்தக் கல்யாணியின் நிலையில் ஊரில இருக் கிற உன் தங்கை இருக்க நேர்ந்தால்.... உன் தங்கை 'அண்ணு! என்னைக் காப்பாத்த மாட்டியா'ன்னு உன் காலில் விழுந்தா நீ சும்மா இருப்பியா? உன்னைக் கெஞ்சிக் கேட்கிறேன். நடந்த உண்மையைச் சொல்லு.

(தீபா இளமுருகின் கால்களைப் பற்று கிறாள். இளமுருகு திடுக்கிட்டுத் தள்ளிப் போகிறான்.)

இள: அம்மா...! என்னம்மா இது? நீங்க வந்து என் காலிலே விழுவதா? என் கண் ணுக்கு முன்னுலேதாம்மா அந்தக் கொடுமை நடந்துச்சு. போன மாசம் மைசூர் போனபோது அவுங்க என்னையும் வழக்கம்போலக் கூப்பிட்டாங்க. அந்தப் பாழடைஞ்ச பங்களாவில் என்னைக் காவல் போட்டுட்டு இவங்க அந்தப் பெண்ணைக் கடத்திக்கிட்டு 'வந்து கெடுத்

டுட்டாங்க. இதைப் பத்தி வெளியே சொல்லக் கூடாதுங்கறதுக்காக அவுங்க எனக்கு ஆயிரம் ரூபா கொடுத்தாங்க.

சிவ: இதை நீ கோர்ட்டிலே சொல்லுவியா?

இள: நிச்சயமா எழுத்து மாறும சொல்றேன், சார். சொந்த அண்ணன் செய்த அக்கிரமத்தை நிரூபிக்கக் காலணுப் பெறாத என் காலிலே வந்து விழுந்திருக்காங்க, அந்தம்மா. இதைச் சொல்ல நான் ஏன் சார் தயங்கணும்? நிச்சயமாக் கோர்ட்டிலே வந்து சொல்றேன், சார்.

சர்மா: சிவராமன்! ஆண்டவன் விளையாட்டைப் பார்த்தியா? எல்லா நம்பிக்கையும் இழந்த நேரத்திலே அவன் ஒருத்தனை அனுப்பிட்டான்.

சிவ: சர்மாஜி, நம்முடைய முயற்சியிலே நடந்த ஒரு காரியத்துக்கு ஆண்டவனை ஏன் இழுக்கிறீங்க? இளமுருகு! வக்கீலைப் பார்த்துட்டு வந்து உன்னைச் சந்திக்கிறேன். அதுவரைக்கும் இந்த விஷயம் யாருக்கும் தெரிய வேண்டாம்.




## காட்சி 16

(எழுமலை நாயுடு வீடு மாடி பால்கனியில் கல்யாணிக்கு ரங்கநாயகி தலை பின்னிக் கொண்டிருக்கிறாள். எழுமலை நாயுடு ஓடி வருகிறார்.)

எழு: ஏய் கிளவி, ஏய் கிளவி! என்ன பண்ணிக்கிட்டிருக்கிறே? சீக்கிரம் வா.

ரங்க: என்னப்பா, என்ன ஆச்சு?

(கீழே வருகிறாள், கல்யாணியும் வருகிறாள்.)

எழு: இளமுருகுதாம்மா சாட்சி. அவன் கோர்ட்டிலே வந்து சாட்சி சொல்றேன்னு ஒத்துக்கிட்டாம்மா.

ரங்க: அப்படியா? எழுமலை ஆண்டவா! நீதானப்பா அந்தப் பையன் மூலமா வந்து சாட்சி சொல்லப் போறே. உன்னை நாங்க கும்புட்டது வீண் போகல்லேப்பா.

எழு: அய்யரும் சிவராமனும் வக்கீலைப் பார்க்கப் போயிருக்காங்க.

கல்யாணி: அவனை ரொம்பச் சுலபமா அவங்க விலைக்கு வாங்கிடுவாங்களேப்பா.

எழு: விலைக்கு வாங்க முடியாத பொருள் சிலதும் இந்த உலகத்திலே உண்டும்மா. உனக்காக 'அந்தப் பொண்ணு நீபா அவன் காலிலே விழுந்திட்டா. அதைப் பார்த்த இளமுருகுக்கு முகமுகன்னு அழுகை பொங்கிட்டு வந்தது. இனிமே இடியே விழுந்தாலும் அவன் மனசு மாறாது. அம்மா! இப்பவாவது கோர்ட்டுக்கு வரியாம்மா?

கல்: நான் கோர்ட்டுக்கு வரமாட்டேன்னு சொன்னதுக்குக் காரணமே நான் பலவந்தப்படுத்தப்பட்டதை நிரூபிக்கச் சாட்சி இல்லேங்கிற ஒரே காரணம்தான். இப்ப சாட்சி கிடைச்ச பிறகு அவுங்களை இன்னும் வெளியே விட்டு வைக்க முடியுமா?

(ஆனந்த் வருகிறான்.)

ஆனந்த்: கல்யாணி!

எழு: அப்பா.. வாப்பா... ஒரு நல்ல சாட்சி கிடைக்கப் போச்சப்பா. இனி அந்தப் பயலுக தப்ப முடியாது.

ஆனந்த்: சாட்சியா?

கல்யா: அப்பா! தயவுசெய்து சும்மா யிருங்க!—இப்பத்தான் வரீங்களா?

ஆனந்த்: என்ன சடார்ன்னு பேச்சை மாத்தறீங்க? நான் வந்தது உங்க பேச்சுக்கு இடைஞ்சலாப் போச்சா?

கல்யா: இல்லே.

ரங்க: ஏம்மா, கல்யாணி! எத்தனே நாளேக்கு இப்படி மூடி மறைக்க முடியும்?

(கல்யாணி மௌனம்)

ஆனந்த்: கல்யாணி, நீங்க எல்லோரும் சேர்ந்து ஏதோ ஒரு விஷயத்தை எங்கிட்ட மறைக்கிறாப்போல் இருக்கே. அது என்ன?

(கல்யாணியின் பார்வையின் பொருளேப் புரிந்துகொண்டு நாயுடு தம்பதிகள் மாடிக்குப் போகிறார்கள்.)

கல்யா: உங்களுடைய தகுதிக்கு நான் கால் தூசி பெறுதவள். உங்க மனசுல நான் கோபுரமா இருக்கேன். அது குப்பை மேடுன்னு உங்களுக்குத் தெரியாது!

ஆனந்த்: இந்தக் குப்பைப் பேச்சையெல்லாம் விட்டுத் தள்ளு! நீங்க மூடி மறைக்கிற விஷயம் என்னன்னு எனக்குத் தெரியும்.

கல்யாணி: (வியப்புடன்) தெரியுமா?

ஆனந்த்: நடைபாதையிலே நல்லபடியா நடந்துக்கிட்டிருக்கிறபோது பிரேக் இல்லாத பஸ் வந்து அடிச்சுக் கீழே தள்ளிட்டா அதுக்கு அடிபட்டவன் எப்படிப் பொறுப்பாக முடியும்? அதுபோல் இதுவும் ஓர் ஆக்ஸிடெண்ட்.

கல்யா: ஆனந்த்!

ஆனந்த்: எங்கப்பா எல்லாம் சொன்ஞர்! உன் மனத் தூய்மை எனக்குப் புரியுது: ஒரே கேள்வி. இப்பச் சொல்லு. நாம விரும்புவது நடக்குமா?

(கல்யாணி புன்னகையோடு தலே ஆட்டுகிருள்.)

ஆனந்த்: ஓ! ரங்கநாயகி அம்மா! ஏ நாயுடு காரு! உங்களுடைய தத்துப் புத்திரி கல்யாணியை எனக்குக் கட்டிக் கொடுக்கச் சம்மதமா?

ரங்க: (படி இறங்கிய வண்ணம்): சாமி, நீ நல்லா இருக்கணும் சாமி! இப்பதான் என் மனசுலே பால் வார்த்தாப்பலே இருக்கு. என் கல்யாணியை விட அதிருஷ்டக்காரி யாரு இருக்க முடியும்?

சர்மா (பிரவேசித்து): ஆனந்த்!

ஆனந்த்: அப்பா! அப்படியே நில்லுங்க.. கொஞ்ச நாளேக்கு முன்னுலே நாம ஓர் ஒப்பந்தம் பண்ணிக்கிட்டோமே...

சர்மா: (இடைமறித்து) நினேவிருக்கா? நான் கேட்கிறேன்!

ஆனந்த்: முதல்லே ஆரம்பிச்சது நான்!





'' நிச்சயமா எழுந்து மாறும சொல்றேன், சார்! ...கோர்ட்டிலே வந்து சொல்றேன், சார்! ''

சர்மா: பேச்சை மாத்தாதே! பனிச்சின்னு முன்னே எனக்குத்தான் நினைவு வந்தது.

ஆனந்த்: நோ நோ. அது எப்படி?

ஏழு: இதில என்னங்க போட்டி! ஆளுக்குப் பாதி பாதியாச் சொல்லிட்டுப் போங்களேன்! ஐயரே, நீங்க முதல்லே ஆரம்பிங்க.

சர்மா: நீ கல்யாணியை....

ஆனந்த்: கட்டாயம் கல்யாணம் பண்ணிக்கத்தான் போறேன்!

சர்மா: ஆனந்த்! என்ன சொன்னே?

ஆனந்த்: நான் ஏதாவது தப்பாச் சொல்லிட்டேனா, அப்பா?

சர்மா: ஆனந்த், உன்னைப் பெத்ததுக்காக இப்பத்தான்டா பெருமைப்படறேன்!

சிவ: (வந்தவாறே): சர்மாஜி! உங்களுக்கு ஒரு குட் நியூஸ்!

சர்மா: சிவராமா! உனக்கும் ஒரு குட் நியூஸ்!

சிவ: முதல்லே என் நியூஸ், அப்புறம் உங்கள் நியூஸ்!

ஏழுமலை: இங்கேயும் போட்டியா? சிவராமப்பா முதல்லே சொல்லட்டும்.

சிவ: வக்கீல் கேஸை எடுத்துக்கச் சம்மதிச்சிட்டார். நேர்முகச் சாட்சி கிடைச்சவுடனே அவருக்கு ரொம்பச் சந்தோஷம். அந்தப் பயங்களைக் கம்பி எண்ண வைச்சுட்டு மறு காரியம் பார்க்கிறேன் என்று அவர் உறுதி கொடுத்திட்டார்.

சர்மா: அப்படியா? அப்போ பிரசாத் நிச்சயமாத் தன் கூட்டாளிங்களோட தண்டனை அனுபவிச்சே தீருவான்.

ஏழு (சர்மாவைப் பார்த்து): ...,ஐயரே, முதல்லே கல்யாணத்தை முடிச்சிடுவோமே! எனக்குப் பேரப் பிள்ளையைப் பார்க்கணும்னு ஆசையாயிருக்கு.

ஆனந்த்: அவசரம் வேண்டாம். அந்த அயோக்கியர்களுக்குத் தகுந்த தண்டனை கிடைக்கிற வரைக்கும் பொறுத்திருப்போம்.

தீபா: (பதற்றத்துடன் பிரவேசித்து) சார், சார்! அக்கிரமம் நடந்துட்டது,சார்! அநியாயம் நடந்துட்டது சார்!

சிவ: என்னம்மா?

தீபா: இளமுருகு லாரியில் அடிபட்டு இறந்துட்டான், சார்.

சிவ: ஆ!

சர்மா: இளமுருகு இறந்திட்டானா?

ரங்க: வேங்கடேசப் பெருமாளே! இந்தப் பொண்ணை இப்படியே போட்டு வாட்டிக்கிட்டு இருக்கியே, இது உனக்கே நல்லா இருக்கா?

ஏழு: போதுண்டி இருப்பதிக்கு நூறுவாட்டி போனது! இனி அவன் படி மிதிக்க மாட்டேன்.

சர்மா: நாயுடுகாரு! ஏன் இப்படிப் பேசறீங்க! ஏழுமலைங்கிற ஒரு பக்தன் தன்கிட்ட எவ்வளவு பக்தியா இருக்கிறான் கிறதைச் சோதிக்கிறான் ஆண்டவன். தளர்ந்திடாதீங்களே!

சிவ: ஆண்டவன்! சர்மாஜி. இனிமே என்கிட்ட இந்தப் பாட்டி கதை சொல்லிக்கிட்டிருக்காதீங்க. நாசமாய்ப் போக! இப்படியும் ஒரு ஆண்டவனா? ஆமாம், இளமுருகு லாரியில அகப்பட்டானா? இல்லே, லாரி ஏத்திக் கொல்லப்பட்டானா?

(பிரசாத் கடகடவென்று சிரித்துக் கொண்டு வருகிறான்.)

பிரசாத்: உங்கள் எல்லோருக்கும் என்னுடைய அனுதாபங்கள். உங்கள் கண் கண்ட சாட்சி விபத்திலே இறந்திட்டானாமே! இந்த வெற்றியைக் கொண்டாட நாங்க மூணு பேரும் திருத்தணி முருகனுக்குப் பாலாபிஷேகம் செய்யப் போறோம். வந்து கலந்துக்குங்க...

(வந்த வேகத்தோடு வெளியேறுகிறான்.)

சிவ: அவனும் தெய்வத்துக்கிட்டேதான் போறான். அவனுடைய பாலாபிஷேகத்தையும் அந்தத் தெய்வம் ஏத்துக்கிது.

சர்மா: அதுக்கும் காரணம் இருக்கும்பா...

சிவ: கடவுள் என்பது பொய். அவன் இந்த உலகத்திலே இல்லேங்கிறதை இன்னும் நீங்க புரிஞ்சுக்கலியா? பிரசாத்தோட கடவுளுக்கும் சேர்த்து நான் சமாதி கட்டப் போறேன். (தொடரும்)

# எங்கும் இதே பேச்சு!

உங்கள் வீட்டுக்காரர் ஏதோ திட்டத்தில் சேர்ந்திருக்கிறாராமே?

ஆமாம், தமிழ்நாடு சமூகப் பாதுகாப்புத் திட்டத்திலே சேர்ந்திருக்கிறார், அத்திட்டம் எங்களுக்கு 30 ஆண்டுகளுக்கு சீரான மாத வருமானமும், கூட மொத்தப் பணமும் அளிக்கும்.



## உங்கள் எதிர்காலக் கவலை நீங்க

# தமிழ்நாடு சமூகப் பாதுகாப்புத் திட்டம்

உதாரணமாக நீங்கள் மாதம் 60 ரூபாய் வீதம் 10 வருஷம் செலுத்தினால் ஒவ்வொரு மாதமும் ரூ. 100 வீதம் 30 வருஷம் ஓய்வு ஊதியமாக இத்திட்டம் திரும்ப அளிக்கிறது. அது தவிர ரூ. 9500ம் மொத்தமாகக் கிடைக்கிறது. இதோ 7 வகைத் திட்டங்கள் உள்ளன. உங்களுக்கு உகந்ததைத் தேர்ந்தெடுங்கள்.

| திட்டம் | A | B | C | D | E | F | G |
|---|---|---|---|---|---|---|---|
| மாதச் சந்தாத் தொகை (ரூபாய்) | 10 | 10 | 10 | 10 | 20 | 30 | 60 |
| சந்தாக் கால அளவு (ஆண்டுகள்) | 10 | 15 | 20 | 25 | 20 | 15 | 10 |
| மாத ஓய்வு ஊதியம் 30 ஆண்டுகளுக்கு (ரூபாய்) | 20 | 35 | 60 | 100 | 100 | 100 | 100 |
| இறுதியில் கிடைக்கும் மொத்த ரொக்கத் தொகை (ரூபாய்) | 1500 | 2500 | 4000 | 5500 | 8000 | 8000 | 9500 |

சந்தாத் தொகையை அரசின் சப்டிரஷரியிலோ அல்லது இத்திட்டத்தில் பங்குபெறும் பாங்கியிலோ செலுத்தலாம்.

மேற்கொண்டு விபரங்களுக்கு அணுகுங்கள்:



இயக்குநர்
சமூகப் பாதுகாப்புத் திட்டம்
தமிழ் நாடு அரசு.

4வது மாடி, குறளகம்,
சென்னை 600 001,
போன்: 20884

TSSS 534

# கொடிய நோய் பரப்பும் கொசு!

உடலெல்லாம் வியர்வை பெருக என் அறைக்குள் நுழைந்தார் அக்பர் ஹுசேன். வியர்வையில் அவர் அணிந்திருந்த சட்டை முழுதும் நனைந்திருந்தது. ''சற்று முன் திடீரென்று என் உடம்பு குளிரால் நடுங்கியது. ஒரு போர்வை, அதன் மேல் ஒரு கம்பளி இரண்டையும் போர்த்திக் கொண்ட பிறகும் குளிர் அடங்கவில்லை. இன்னொரு கம்பளியையும் எடுத்துப் போர்த்திவிட்டு, நடுங்கும் என் உடலை இறுக அணைத்துக் கொண்டார் என் அண்ணன். அரை மணி நேரத்துக்குப் பிறகு குளிர் விட்டது. உடல் 'குப்' பென்று வியர்த்து விட்டது. சற்றைக்கெல்லாம் உடம்பு தணலாகக் கொதிக்க ஆரம்பித்தது. தர்மாமீட்டர் 104 டிகிரி காட்டியது. தலை வலியும் இருக்கிறது.''

''வீட்டில் கொசு இருக்கிறதா?''

''நிறைய இருக்கிறது. பகலிலேயே கூடப் பறந்து கொண்டிருக்கும். எங்கள் தெருவில் எல்லா வீடுகளிலுமே கொசு உபத்திரவம் தாங்க முடியவில்லை'' என்றார் அக்பரின் அண்ணன்.

அக்பரின் குடல் பகுதியில் விரல்களால் அழுக்கிப் பார்த்தபோது மண்ணீரல் (Spleen) விரிவடைந்திருப்பது தெரிந்தது.

அக்பரின் இரத்தத்தைச் சோதனை செய்ததில் இரத்த அணுக்களுள் மலேரியா பாரஸைட் (Parasites)டுகள் இருந்தது தெளிவாகியது.

''உங்களுக்கு மலேரியா எனப்படும் குளிர் காய்ச்சல். இந்த மாத்திரைகளை மூன்று நான்கு நாட்களுக்குச் சாப்பிட்டு வாருங்கள். தினமும் மூன்று வேளை. மறுபடியும் வராமல் இருக்க அதன் பிறகும், பதினைந்து நாட்களுக்குத் தினம் ஒரு மாத்திரை வீதம் சாப்பிட்டு வரவேண்டும்'' என்று கூறி, குவினைன் சல்பேட் மாத்திரைகளை எழுதிக் கொடுத்து அனுப்பினேன்.

''மலேரியா என்னும் குளிர் காய்ச்சல் உயிருக்கு ஆபத்து விளைவிக்கக் கூடிய நோய் அல்லவா?''

''சாதாரண மலேரியா நோயினால் பெரிய ஆபத்து ஏதுமில்லை. ஆனால் ஸெரிப்ரல் (Cerebral) அல்ஜிட் (Algid) மலேரியா வகைகளால் ஆபத்துண்டு. முதல் வகை மூளையைப் பாதிக்கும். இரண்டாவது வகையில் மலத்துடன் இரத்தம் வெளிப்படக்கூடும். இன்னொரு வகை 'ஃபால்ஸிபரம்' (Falciparum) எனப்படும். இதுவும் மிகக் கொடிது. சிறுநீரகத்தைப் பாதிக்கும், இவ்வகை மலேரியா. நம் நாட்டில் இம் மூன்று வகைகளுமே நல்ல காலமாகப் பரவவில்லை.''

''கொசுவினால்தானே இந்நோய் பரவுகின்றது?''

''ஆமாம். அனோஃபிலிஸ் (Anopheles) என்னும் பெண் கொசுக்கள்தாம் மலேரியாவுக்குக் காரணமானவை. அசுத்த நீர் தேங்கி நின்றால் அதில் கொசுக்கள் முட்டையிட்டுப் பெருகும். நம் வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொண்டாலும், பக்கத்து வீடுகளில் அசுத்த நீர் தேங்கி நின்றால் இந்நோய்க்கு இலக்காகும் வாய்ப்பு உண்டு. கொசு கடிக்காமல் ஏதேனும் ஒரு விதத்தில் பாதுகாப்புப் பெறுவது அவசியம்.''

''மலேரியாவுக்கு இலக்கானவர்களுக்குத் தினமும் குளிர் காய்ச்சல் வருமா?''

''பொதுவாக ஒரு நாள் விட்டு ஒரு நாள் வரும். அபூர்வமாகச் சிலருக்கு 107 டிகிரி வரை காய்ச்சல் அடிப்பதும் உண்டு. ஒரு தடவை காய்ச்சல் வந்தால் மூன்று மணி முதல் எட்டு மணி நேரம் வரை காய்ச்சல் நீடிக்கக் கூடும். ஒரு முறை மலேரியா வந்து முற்றும் குணமாகி விட்டால் மறுபடியும் வராது எனக் கூறுவதற்கில்லை. ஒரு குடும்பத்தில் ஒருவருக்கு மலேரியா வந்தால் மற்றவர்களும் முன்னெச்சரிக்கையாக மருந்து சாப்பிடுவது நல்லது.''

டாக்டர் ஜி. வி. ஸ்ரீதரன் கூறக்கேட்டு எழுதியவர்: ஆர். பி.



# தமிழகமே! பெருமைப்படு!

"ஒன்ஸ் மோர்!"

"திரும்பவும் ஓட்டமா? அதிசயமா யிருக்கே!"

"ஆமாம்! 900 எண்ணுள்ள ராஜஸ்தான் ஓட்ட வீரர் வீரேந்திர டோமாரை ஓட்டியபடியே ஓடிக் கர்நாடக ஓட்ட வீரர் 'சத்னம் சிங்-2' இழுத்து விட்டார்! டிராக் ரிபரி மறு ஓட்டத்துக்குத் தீர்ப்பு அளித்து விட்டார்! முதல் ஓட்டம் செல்லுபடியாகாது!"

"அது சரி! இதென்ன ரிகார்டு கண்ட உஷாராணி மறுபடியும் குறைந்த அளவு உயரம் தாண்டுகிறாளே! இதுவும் ஒன்ஸ்மோரா?"

"இந்த ஒன்ஸ்மோர் — டெலிவிஷன், செய்தித் துறைப் படப் பிடிப்பாளர்களுக்காக! அவர்களுக்கு 'ஆக்ஷன்'ஷாட் எடுக்கணுமே!"



தமிழக ஆளுநர் சுகாடியாவிடமிருந்து அனசூயா தமிழகப் பெண்மணிகள் சாம்பியன் பட்டப் பரிசைப் பெறுகிறார்.

• • •

"இதோ ஓடி வருகிறாரே, ஜலஜா நரேஷ். இவருக்கு 1974ல் திருமணமாயிற்று! 1975ல் இவள் ஒரு குழந்தைக்குத் தாயானாள்! இன்னும் அந்த அன்னை ஓட்டப் பந்தயத்தில் கலந்து கொள்கிறாள்!"

கர்நாடக அணி ஜலஜா நரேஷ் 1500 மீட்டர் ஓட்டப் பந்தயத்தில் ஒரு புதிய ரிகார்டு கண்டு 'தங்கப் பதக்க'த்துக்கு உரியவராகிறார்! அவளது குழந்தை அப்பாவின் பிடியிலிருந்து தாவி அன்னைக்குக் கிட்டிய வெற்றிக்கு முத்தமிட்டுப் பாராட்டுகிறது!

• • •

ராஜரத்தினம் ஸ்டேடியம் நிசப்தமாகக் காட்சியளிக்கிறது. அனைவரது பார்வையும் அந்த உயரம் தாண்டல் காட்சியில் நிலைத்து நிற்கிறது. ஒரிஸ்ஸாவைச் சேர்ந்த உஷா ராணி மிஸ்ரா துள்ளிக் குதிப்பதற்கு முன் பூமிதேவியைக் கைகளால் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டு தன் சாதனையைத் தொடருகிறாள்! அவளது தெய்வ நம்பிக்கை வீண் போகவில்லை! அவள் தேசிய ரிகார்டை முறியடித்து 1.67 மீட்டர் தாண்டுகிறாள். கட்டக்கில் எஸ். பி. பெண்கள் கல்லூரி மாணவி உஷா ராணியை அவளது ஆசிரியை லோடிகா தாஸ் தலையில் தூக்கி வைத்துக் கொள்ளாத குறையாகக் கொண்டாடுகிறார்! தமிழக அணியில் மூன்று தங்கப் பதக்கங்கள் கண்ட அனசூயா வந்து உஷா ராணியைக் கைகுலுக்கி மகிழ்கிறார்! தேசிய ஒருமைப்பாடு ஓட்ட வீரர்களிடம் மிளிர்கிறது.

பதினைந்தாவது அகில இந்திய அனைத்து ராஜ்யங்கள் ஓட்டப் போட்டியில் மாரத்தான் பந்தயம். ராஜரத்தினம் ஸ்டேடியத்திலிருந்து குரோம்பேட்டை போலீஸ் நிலையம் வரை ஓடித் திரும்ப வேண்டும்! இருபத்தாறு மைல் மாரத்தான் பந்தயத்தில் மகாராஷ்டிர ஓட்ட வீரர் பரம்ஜித் சிங் 2 மணி 30 நிமிஷங்கள் 27 செகண்டில் ஓடித் தங்கப் பதக்கம் கண்டார். பஞ்சாபியரின் ரத்தத்திலேயே விளையாட்டு ரத்தம் ஓடுவது மாரத்தான் வெற்றியில் நிரூபணமாயிற்று.

• • •

பதினேழு ராஜ்யங்களைச் சேர்ந்த சுமார் 1200 ஓட்ட வீரர்கள், வீராங்கனைகள் பங்கேற்றனர். இந்தப் பந்தயத்தில் பதினொரு ரிகார்டுகள் ஏற்பட்டன. தமிழகத்தை தலை நிமிர்ந்து உற்சாகத் துள்ளல் நடை போட

உயரம் தாண்டுதலில் 'ரிகார்டு' கண்ட உஷா ராணி மிஸ்ரா.



வைத்தனர் தமிழக அணி ஓட்ட வீரர்கள், வீராங்கனைகள். மற்றப் பதினாறு ராஜ்யங்களை விடத் தமிழக ஓட்ட அணியே முன்னணியில் நின்றது. பதினாறு தங்கப் பதக்கங்களும், பன்னிரண்டு வெள்ளிப் பதக்கங்களும், ஆறு வெண்கலப் பதக்கங்களும் பெற்றது. தமிழகப் பெண்கள் அணி 38 பாயிண்டுகள் பெற்று 'சாம்பியன்'பட்டம் சூடியது தனிப் பெருமை.

இரண்டாவது ஸ்தானம் பஞ்சாபுக்கு. மூன்றாவது ஸ்தானம் பீகாருக்கு. ஆடவர் சாம்பியன் பட்டத்தைப் பீஹார் சூடிக் கொண்டது.

தமிழக அணியில் அனசூயா மூன்று தங்கப் பதக்கங்களைப் பெற்றுத் தந்தார்.

பத்தொன்பது வயதுக்குட்பட்ட இளைஞர் போட்டியில் அண்ணாமலை மூன்று தங்கப் பதக்கங்களைக் குவித்தார்.

தமிழக அணிக்கு மேலும் பெருமை சேர்த்தவர்கள் இரு தங்கப் பதக்கங்கள் பெற்ற சாண்ட்ரா தாமஸ், நூறு மீட்டர் ஓட்டப் பந்தயத்தில் தனிப் புகழ் பெற்ற குமாரி எம். ஆனந்தி, ஞானசேகரன், வி. தங்கராஜ், கே. எஸ். பாலசுப்பிரமணியம், சாக்கோ ஜாகப், எம். மணி, டி. சுந்தர்ராஜ் என்று பட்டியல் நீள்கிறது.

'மகிழ்ச்சி மகிழ்ச்சி மகிழ்ச்சி' என்று பன்முறை கூறி வாழ்த்துத் தெரிவிப்பதிலும் ஒரு ரிகார்ட் ஏற்படுத்துவோம்! —**குண்டுமணி**

---

படவிளக்கம்; ஸிட்னி டெஸ்டில் புகழ் பெற்ற பாகிஸ்தான் பந்து வீச்சாளர்களை ஓவியர் வினுவின் சித்திரங்களாகக் கீழே காண்கிறோம்.

மேலே: 'நிஸி' பட்டம் பெற்ற இம்ராம் கான்.

கீழே: சர்ஃப்ராஸ் நவாஸ்.

# பயங்கர ஆதிவாசி

★ஸிட்னியில் கடைசிடெஸ்ட். ஆஸ்திரேலிய பாட்ஸ்மன்களைத் தலைதூக்க விடாமல் தங்கள் பௌலிங் சாதனைகளால்பாகிஸ்தானுக்குமுதல் வெற்றி கிட்ட வைத்தனர் இம்ரான் கானும் சர்ஃப்ராஸும்.

ஆக்ஸ்போர்டு காப்டன் இம்ரான் கான் நல்ல பாட்ஸ்மன்னும்கூட. ஐந்து சதங்கள் கண்டிருக்கிறார்.

விரைவு பந்து வீச்சாளர் இம்ரான் கான் முதல் இன்னிங்கில் 112 ரன்களில் ஆறு விக்கெட்டுகளும், இரண்டாவது இன்னிங்கில் 63 ரன்களில் 6 விக்கெட்டுகளும் எடுத்துப் பெரும் புகழ் எய்தினார். இந்த டெஸ்டின் 'கதா நாயகன்' என்ற பட்டமும் '*Nizi*' (பயங்கர ஆதிவாசி) என்ற பட்டப் பெயரும் கிட்டியதில் வியப்பில்லை.

ஆஸ்திரேலியாவில் இம்ரான் கான் கடைசி 'வால்' பாட்ஸ்மன்களுக்கு 'பௌன்சர்' வீசிய போது எச்சரிக்கையும் செய்யப்பட்டார்!

★பாகிஸ்தானின் வெற்றிக்கு உதவிய மற்றொரு பௌலர் சர்ஃப்ராஸ் நவாஸ்.

ஆஸ்திரேலிய காப்டன் சாப்பல் ''இப்போதுள்ள நிலையில் மழை ஒன்றே எங்களைக் காப்பாற்றக் கூடியது! பாகிஸ்தான் ஆட்டக்காரர்கள் எங்களை ஆட்டத்தில் மிஞ்சி விட்டார்கள்!'' என்று வியந்திருக்கிறார். அது மட்டுமல்ல; ''எங்கள் ஆட்டத்தைப் பற்றிப் பலத்த கண்டனம் எழும்புவது எளிது. ஆனால் அப்படி பேசுபவர்கள் பாகிஸ்தான் பௌலர்களின் ஆற்றலை முழுமையாக உணரவில்லை என்கிறது!'' என்றும் மனம் விட்டுப் பாராட்டியிருக்கிறார்!

ஆஸ்திரேலியாவிலிருந்து பாகிஸ்தான் தோல்வியடையாமல் 'டிரா'வில் ஐந்து டெஸ்ட் ஸீரியஸுக்கு மேற்கிந்தியத் தீவுக்குப் பயணமாகி விட்டது! 'இனி ஆஸ்திரேலியாவோடு ஐந்துடெஸ்ட் ஸீரியஸ் ஆடவும் தயார்' என்று இந்த ஸிட்னி வெற்றிக்குப் பிறகு காப்டன் முஷ்டாக் 'மார்தட்டிக் கொள்கிறார்! — **பி. எஸ். எம்.**





# ஸ்ரீ ஒப்பிலியப்பனின் ஒப்பற்ற அருளைத் தொடர்ந்து பெற ரூ. 1000 காணிக்கை செலுத்துங்கள்



ஸ்ரீ ஒப்பிலியப்பன் கோயில் ஆழ்வார்களால் பாடப்பட்டுள்ள புனிதமான வைணவத் தலங்களில் ஒன்றாகும். ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் தங்களது பிரார்த்தனைகளைச் செலுத்தும் அரிய தலம் இது.

ஸ்ரீ ஒப்பிலியப்பன் கோயிலில் நாள் ஒன்றுக்கு ஆறு காலப் பூஜைகளுக்கும் மொத்தச் செலவு ரூ. 100 ஆகிறது. பக்தர்கள் இத்தொண்டில் பங்கேற்க ஒரு திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

இந்தியன் பாங்க் மூலம் ஸ்ரீ ஒப்பிலியப்பன் கோயிலுக்குக் காணிக்கையாக ரூ. 1000 அனுப்பி வையுங்கள். உங்கள் காணிக்கை இந்தியன் பாங்கின் திருநாகேசுவரம் கிளையில் உள்ள ஒப்பிலியப்பன் கோயில் கணக்கில் சேர்க்கப்படும்.

காணிக்கை செலுத்தும்போது நீங்கள் குறிப்பிடும் ஏதேனும் ஒரு நாளில் உங்கள் குடும்ப நலனுக்காகக் கோயிலில் ஆறுகாலப் பூஜைகளும் நடத்தப்படும். பிரசாதத்தை நீங்கள் நேரிலோ அல்லது தபால் மூலமோ நிரந்தரமாகப் பெறலாம்.

காணிக்கைகள் வரிசைக்கிரமப்படி தான் ஏற்றுக் கொள்ளப்படும். எனவே உடனடியாகக் காணிக்கை செலுத்தி ஒப்பிலியப்பனின் ஒப்பற்ற அருளைப் பெற முந்துங்கள்.

நிர்வாக அதிகாரி, ஸ்ரீ ஒப்பிலியப்பன் தேவஸ்தானம், திருநாகேசுவரம்.

உங்கள் காணிக்கைகளை எந்தக் கிளையிலும் செலுத்தலாம். இந்தியன் பாங்க் (இந்திய அரசுக்கு முற்றிலும் உடைமையானது)
தலைமை அலுவலகம்:
17 வடக்கு கடற்கரைச் சாலை,
சென்னை 600 001

"சாமாவைப் பாத்தியாடா!"

வீட்டுக்குள்ளே காலெடுத்து வைச்சதுமே அம்மா கேட்டாள்.

அந்தக் கேள்வி புதுசில்லே. நான் ஆபீசுக்குப் போயிட்டு வந்தாலோ, இல்லே; வெளியிலே யாராவது சிநேகிதர்களைப் பார்க்கப் போயிட்டுத் திரும்பினாலோ அவளோட முதல் கேள்வி அதாகத்தான் இருக்கும்.

அவளோட வேதனை அவளுக்கு. பிள்ளைங்கற பாசம் அவளைப் போட்டுத் துவட்டி எடுத்திண்டிருக்கு. கேட்காம என்ன செய்வா?

எல்லாத்துக்கும் என் அப்பா தான்காரணம்.

அன்னிக்கு அவர் அப்படிக் கூப்பாடு போட்டுத் தோளுக்கு மேலே வளர்ந்துட்ட பிள்ளையைத் தொட்டு அடிச்சிருக்க வேண்டாம்னு தான் தோணறது. அடியும், திட்டும் வாங்கற பிள்ளையாயிருந்தால் பரவாயில்லே. அதோட ரோஷமும் அவனோட ரத்தத்துலே கலந்திருக்கே! அசட்டுத்தனம்தான்.

'இனிமே உங்களுக்கும் எனக்கும் உறவு விட்டுப் போச்சு. நான் உங்க பிள்ளையுமில்லே. நீங்க எனக்குத் தகப்பனுமில்லே'ன்னு சொல்லிட்டுக் கட்டிண்டிருந்த வேட்டிசட்டையோட கிளம்பிப் போனவன்தான். இன்னிவரைக்கும் திரும்பலே. ஓர் இடமா, ரெண்டு இடமா? எங்கேயெல்லாமோ தேடிப் பார்த்தாச்சு.

அப்பாவோட கோபத்தினாலே ரெண்டு விஷயம் நடந்து போச்சு.

சாமா வீட்டை விட்டுப் போனது ஒண்ணு. அந்த ஏக்கத்திலேயே அம்மா படுத்த படுக்கையாயிட்டது இன்னொண்ணு.

அப்பா பரவாயில்லே. பெண்டாட்டியின் நிலைமையோ, ஓடிப் போனவனைப் பத்தின கவலையோ தன்னைப் பாதிக்கக் கூடாதுன்னு நெனைச்சாரோ என்னவோ, ஒருநாள் போக்குன்னு போயிட்டார்.

காசு பணம் கொஞ்சம் இருந்தது. சொந்த வீடு. கவலையில்லாமல் காலம் ஓடித்து.

பேருக்குப் பின்னாடி பி. ஏ.ன்னு ரெண்டு எழுத்தை ஒட்டிண்டு அப்பாவின் நண்பர் கிட்டாவைப் போய்ப் பார்த்தேன். பத்து நிமிஷங்களுக்கெல்லாம் அப்பாயின்ட்மென்ட் ஆர்டரையே கையிலே அடிச்சுக் கொடுத்திட்டார்.

இதுலே அம்மாவுக்குச் சந்தோஷம்தான். ஆனா அது அன்னியோட சரி. அப்புறம், 'சாமா இருந்தானா அவனும் நன்னாப் படிச்சு உன்னை மாதிரி ஒரு எடத்துலே உட்கார்ந்து சம்பாதிப்பான். எங்கே போய்த் தொலைஞ்சானோ?'ன்னு புலம்ப ஆரம்பிச்சுட்டா.

ஒவ்வொரு மாசமும் நான் சம்பளத்தைக் கொண்டு வந்து அம்மா கையிலே கொடுப்பேன். 'நீ இன்னும் ஆயிரம் ரெண்டாயிரம்னு கொண்டு வந்து தந்தாலும் நான் தவிக்கிற தவிப்பு அடங்காதேடா. அவனை எங்கேயாவது பார்த்தியா? பெத்தவன்னு ஒருத்தி இருக்காளே, பார்ப்போம்னு அவனுக்குத் தோணலியே! எங்கே கிடந்து சீரழிஞ்சிண்டிருக்கானோ?'ன்னு ஏங்கறப்போ சம்பாதிக்கிற என்னைக் காட்டிலும், சகட்டுமேனிக்கு நாலு வார்த்தை அள்ளித் தெளிச்சுட்டுப் போன அவன்தான் அவள் மனசை ஜாஸ்தியா ஆக்கிரமிச்சிண்டிருக்கான்னு புரிஞ்சுது. அதை ஒரு தப்பாகவும் என்னாலே நெனைக்க முடியலே.

நான் என்ன பண்ணுவேன்? சொல்லுங்கோ. தேடாத இடமில்லே. தெரிஞ்சவா புரிஞ்சவான்னு எல்லார் கிட்டேயும் சொல்லியிருக்கேன்.

என்னைவிட அஞ்சு வயது மூத்தவன் அவன். வர பிப்ரவரிக்கு முப்பத்தஞ்சு முடியறதுன்னு நெனைக்கறேன்.

இருபத்தொண்ணுலே வீட்டை விட்டு ஓடினான். பதினாலு வருஷம் ஓடியது தெரியாமல் ஓடி விட்டது. இனி திரும்பி வருவான்னு ஒரு துளிக்கூட எனக்கு நம்பிக்கையில்லே.

ஆனால் அம்மாவுக்கு....?

இந்தப் பதினாலு வருஷமா நாள் தவறாமல் வாய் நோகாமல் அவள் என்னைக் கேட்டிண்டு இருக்கிறதிலிருந்து, சாமாவைப் பத்தின நினைவு ஒரு வியாதியா முற்றி அவளைச் சித்தப்பிரமை பிடிச்சவ மாதிரி மாத்தி வைச்சிருக்கோன்னு சமயங்களிலே நான் நெனைக்கறதுண்டு.

இந்த நிலைமையிலே, 'ஏண்டா! நானும் வெட்டிப் போட்ட மரமாட்டமா மல்லாக்க விழுந்துட்டேன். நீ என்னைக் கவனிக்கக்கறே. இல்லேங்கலே. உன்னைக் கவனிக்கிறது யாரு? பேசாம நம்ம சாருவைக் கல்யாணம் பண்ணிண்டுடு. மூத்தவன் முகத்தைத் தூக்கிண்டு போயிட்டானா அதுக்காக உனக்கு ஏண்டா இந்தத் தண்டனை? பிரம்மச்சாரியா இருக்கறதுக்கு ஒரு காலக் கணக்கு இல்லையா? முப்பது வயது தாண்டப் போறது. சாயங்காலமா வர போது ஒரு கார்டு வாங்கிண்டு வா. ஊருக்கு எழுதறேன்'னு ஒருநாள் அம்மா சொன்னாள்.

என்னாலே ஒரு வார்த்தை எதிர்த்துச் சொல்ல முடியலே. ஏன்னா, அவ உசிரே சாதகமான ஒரு வார்த்தையிலேதான் இருக்கு. எல்லாம் அனுசரணையா நடந்தா அவளோட ஆயுசும் இன்னும் கொஞ்ச நாட்கள் தாங்கும்னு தெரியறப்போ மறுத்து எதுக்குச் சொல்லணும்?



மனமனன்னு நாலு வரி எழுதினு. மூணாவது நாளே ஊரிலிருந்து அவாள்ளாம் வந்தா. ரெண்டே வாரங்களிலே திருநீர்மலையிலே கல்யாணம் நடந்து முடிஞ்சிடுச்சு.

அம்மாவுக்கு ரொம்பத் திருப்தியாப் போயிருக்குமேன்னு நெனைக்கறேளா? இல்லே!

'சாமா வீட்டோட இருந்திருந்தான்னு அவனையும் மாலையும் கழுத்துமா பார்க்கற சந்தர்ப்பம் வாச்சிருக்குமே'ன்னு நெனைச்சு நெனைச்சு ஒருநாள் நெஞ்சு வெடிக்க அவ கத்தித் தீர்த்ததைப் பார்த்திருந்தேன்னு தெரியும்.

**சா**ரு வீட்டுக்கு வந்த பின் என் சுமை பெருமளவுக்குக் குறைந்திருந்தது.

என் உறவுக்காரப் பையன் ஒருவனுக்குத் திருச்சியில் திருமணம் என்று அழைப்பு வரவே, அம்மா 'நீ மட்டுமாவது போயிட்டு வரணும்'னு சொல்லி விட்டாள். அதனால், சரின்னு புறப்பட்டேன்.

கல்யாணத்தன்று மாலை கொஞ்ச நேரம் காலாற நடந்திட்டு வருவோமுன்னு புறப் பட்டேன்.

மெயின்கார்ட் கேட் பக்கம் வரப்போ மழை வரும்போல் இருக்கது. திரும்பிப் போயிடலாம்னு நெனைக்கறதுக்குள்ளே தூறல் விழ ஆரம்பிச்சுடுத்து. எதிர்த்த சாரியிலே இருந்த ஹோட்டல் வாசல்லே ஒதுங்கினேன்.

கால் மணி அரை மணின்னு நேரம் ஓடின் டிருந்ததே ஒழிய மழை நின்ற பாடில்லே. சரி, காப்பியாவது குடிப்போம்னு உள்ளே போய் உட்கார்ந்தேன்.

''ஸாருக்கு என்ன வேணும்?'' என்று சர்வர் கேட்டான்.

''ஒரு காப்பி கொண்டா''ன்னு சொல்லும் போது அவன் முகத்தைப் பார்த்தேன். எங் கேயோ பார்த்த முகமா யிருந்தது. அவனும் என்னைக் கொஞ்ச நேரம் உற்றுப் பார்த்தான். அப்புறம், ''நீங்க....உங்க பேரு நடேசன் இல்லே?''ன்னு தயக்கத்தோடு கேட்டான்.

எனக்கும் அவன் யாருன்னு புரிஞ்சுடுச்சு. சென்னையிலே நானும் அவனும் ஒண்ணா எஸ். எஸ். எல்.சி. வரைக்கும் படித்தோம். பேரு தியாகராஜன்.

''ஏண்டா? நீ தியாகுதானே?'' என்று கேட்டேன்.

மழை நின்னு நான் புறப்பட்டப்போ, 'ரொம்ப நாள் கழிச்சு ஒருத்தரை ஒருத்தர் பார்க்கறோம். இன்னி ராத்திரி என் வீட்டுக்கு வா. நிறைய விஷயங்கள் பேச வேண்டியிருக் குன்னு சொன்னான். சரின்னேன்.

ராத்திரி சாப்பாடு முடிஞ்சதும் கல்யா ணப் பிள்ளையிடம் சொல்லிவிட்டுத் தியாகு சொன்ன முகவரியைத் தேடிப் புறப்பட்டேன்.

என்னைப் பார்த்தவனுக்கு ஒரே சந்தோ ஷம். பாயை எடுத்துப் போட்டான். ஆசார உபசாரம் செய்தான்.

போன கொஞ்ச நேரத்துக்குள்ளே அவன் கதை முழுவதையும் சொல்லி முடிச்சான். படிப்பை முடிச்சதும் வேலை கிடைக்காமல் திண்டாடினது. தாய் தகப்பனைப் பறி





பாரிஸில் சுற்றுலாப் பயணிகள் வசதிக்காக 'மினி-கார்'கள் உண்டு. தெருவில் ஆங்காங்கே நிறுத்தப் பட்டிருக்கும் இந்தக் கார்களில் ஓர் உண்டியல் உண்டு. குறிப்பிட்ட தொகையை அதில் போட்டு (ஒரு மணி நேரத்துக்கு இவ்வளவு என்று கணக்கு) சுற்றுலாவாசி அதனை எடுத்துக் கொண்டு ஊரைச் சுற்றிப் பார்த்து விட்டு, எங்காவது அந்தக் காரை நிறுத்தி விடலாம். அடுத்த சுற்றுலாவாசி அதனை முன்னவர் செய்தது போலவே செய்து பயன்படுத்தலாம். இதல்லவோ நாணயம்!

—ஸ்போர்ட்ஸ் இல்லஸ்டிரேடட் -ஆ.எம்-

கொடுத்தது. கடைசியிலே ஹோட்டல்லே வேலைக்குச் சேர்ந்தது.....

அவன் சொல்லிண்டு வந்ததைக் கேக்கறப்போ எனக்கே மனசு கலங்கிடுத்து.

பேசிண்டே இருந்தவன், 'மீனாட்சி'ன்னு குரல் கொடுத்தான். யாருடான்னு கேட்டேன். 'என் தங்கச்சி' என்றான்.

குடுகுடுன்னு அவள் ஓடி வந்தாள்.

நிமிர்ந்து பார்த்தேன்.

நெத்தியிலே எதுவுமில்லாமே ஏதோ சிதைஞ்சு போன சித்திரம் மாதிரி அவள் இருந்ததைப் பார்த்தப்போ எனக்கு ஒண்ணும் புரியல்லே. தியாகுவைப் பார்த்தேன். எனக்குள்ளே இருக்கிற குழப்பத்தை அவன் தெரிஞ்சிண்டிருக்கணும். 'மணியை அனுப்பிச் சர்மா கடையிலேருந்து பால் வாங்கிண்டு வரச் சொல்லு'ன்னு அவளை அனுப்பிட்டு என்னைப் பார்த்து. ''பார்த்தியா? வாழ வேண்டிய பொண்ணு இப்படி மொட்டை மரமா பட்டுப் போய் நிக்கறது. அவளுக்காகவே சிறுகச் சிறுகக் காசு சேர்த்தேன். என்னோட சக்திக்கேத்த இடமாகத் தேடி அலைஞ்சேன். நான் வேலை பார்க்கிற ஹோட்டலிலேயே ஒருத்தன் வேலைக்கு வந்து சேர்ந்தான். தங்கமான பையன். தனக்கு யாருமே இல்லேன்னான். நானும் சர்வர், அவனும் சர்வர் என்கிற ஒரு சம அந்தஸ்து. மனம் விட்டுப் பழகினேன். வீட்டுக்கு வரப் போக ஆரம்பிச்சான். ஒரு நாள், 'உன் தங்கையை நான் கல்யாணம் பண்ணிக்கறேன்'னு தானே வாய் விட்டுச் சொன்னான். மலைக்கோட்டைப் பிள்ளையாரைச் சாட்சியா வைச்சுண்டு கல்யாணத்தை முடிச்சேன். ஒரு மாசம் இல்லே, அதுக்கு மேலே கொஞ்ச நாட்கள் ரெண்டு பேரும் சேர்ந்து வாழ்ந்திருப்பாங்க. ஒரு நாள் ஜுரம்னு படுத்தான். எவ்வளவோ பேருக்கு ஜுரம் வரது போறது. இவனுக்கு வந்த ஜுரம் அவளோட நெத்தியைத் துடைச்சிட்டு அவனையே அடிச்சிண்டு போயிடுத்து...''

அதுக்கு மேலே பேச முடியாமே அவன் பொம்பளையாட்டம் குலுங்கிக் குலுங்கி அழுததைப் பார்த்தப்போ, ஏற்கனவே பஞ்சத்துக்கு ஆண்டியா இருந்தவனுக்குப் பகவான் இப்படி ஒரு சோதனையைக் கொடுத்திருக்க வேண்டியதில்லேன்னுதான் பட்டது.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவனே தன்னைச் சுதாரிச்சுண்டு பேசினான். ''அவனை நீ பார்த்திருந்தா அவனு இதுமாதிரி அல்பாயுசுலே போயிட்டான்னு கேட்பே. ஆள் வாட்ட சாட்டமா கழுக்கு மொழுக்குன்னுதான் இருந்தான். இப்படிச் சொன்னவன் தன்னுடைய பெட்டியைத் திறந்து கொஞ்ச நேரம் குடைஞ்சான். அடியிலேருந்து ஒரு கவரை எடுத்தவன் அதுக்குள்ளே யிருந்து போட்டோ ஒன்றை எடுத்து, ''இதோ பாரு. அவளுக்குக் கல்யாணமாச்சுங்கறதுக்கு அடையாளமா இது ஒண்ணுதான் இருக்கு''ன்னு சொல்லி அதை என் கையில் கொடுத்தான்.

புதுப் பொண்ணு தலை சீவி, பொட்டு இட்டுண்டு லட்சணமா இருந்த அவ பக்கத்திலே சாமா நின்னுண்டிருந்தான்! என் அம்மாவைத் தன்னோட பெயரை வாய் ஓயாம உச்சரிக்க வைச்சிருக்கிற அதே சாமாதான். வீட்டை விட்டு ஓடிப் போனவன் அவளைக் கல்யாணம் பண்ணிண்டப்புறம் அங்கேயும் தங்காமே உலகத்தை விட்டே ஓடிப் போயிட்டான்.

''தியாகு! செத்துப் போனவன் வேறே யாருமில்லேடா. என் அண்ணன்தான்''னு கதற நினைத்தேன். வாய் வரவில்லே!

நெஞ்சை ஏதோ அடைக்கிற மாதிரி... கண்கள் குளமாகிற மாதிரி.... சுத்தியிருக்கிற அத்தனையும் மறைஞ்சு நான் கொஞ்சம் கொஞ்சமா மூழ்கிப்போற மாதிரி....

அடுத்த நாள்.

வண்டியிலே உட்கார்ந்திண்டிருக்கிறேன். அம்மாவைச் சுத்தியே நினைப்பு முழுக்க. வீட்டுலே நுழைஞ்ச உடனே பித்துக்குளி மாதிரி கேட்பா, 'சாமாவைப் பார்த்தியாடா' என்று. என்ன சொல்வேன்?

'அவனைப் பார்க்க முடியாதும்மா. அவன் செத்துப் போயி எத்தனையோ நாளாச்சு'ன்னு சொல்றதா? அப்படிச் சொன்னா அவளாலே தாங்கிக்க முடியுமா? நடமாடற என்னாலேயே முடியல்லே... நானே எண்ணிண்டிருக்கிற அவளாலே முடியுமா? நான் உண்மையைச் சொன்னா அது அவளை....

நெனைக்கறப்பவே உடல் நடுங்கிற்று.

வேண்டாம். சொல்ல வேண்டாம். அம்மாவைப் பொறுத்த வரைக்கும் அவன் உசிரோடவே இருக்கட்டும். அப்பத்தான் அவ உசிரு கொஞ்ச நாளைக்காவது நிலைச்சிருக்கும்.

வீடு வந்து சேர்ந்தேன்.

சாரு அம்மாவுக்குக் கஞ்சியோ, காப்பியோ கொடுத்திண்டிருக்கா.

என் தலையைக் கண்டதும் அம்மா கேட்கறா: ''வாடா, சாமாவைப் பாத்தியா?...''

ஐயோ! 'இல்லே'ன்னு சட்டுனு என்னாலே சொல்ல முடியல்லே!

கடவுளே! மனசறிஞ்சு ஓர் உண்மையை மறைக்கிற தைரியத்தைக் கொடு. எல்லாம் அம்மாவுக்காகத்தான்.

## அத்தியாயம் 12

# சமயம் வந்தது

# சேரமான் காதலி

மேலே பொன் விதானம்; ஆங்காங்கே செயற்கையான நட்சத்திரங்கள்.

அதை ஒட்டி அழகழகான மேகங்கள் ஓடிக்கொண்டிருந்தன.

கீழே ஒரு பூப்படுக்கை; சுற்றிலும் அடுக்கடுக்கான பட்டுச் சால்வைகள்.

அழகான அந்த மண்டபத்தில் எங்கிருந்தோ நறுமணம் தவழ்ந்துகொண்டிருந்தது.

தென்னங் கீற்றுக்களின் சலசலப்பு அதற்குத் தாளமிட்டுக்கொண்டிருந்தது.

அதற்குள்ளே சேரமானும் சலீமாவும் நுழைந்தபோது, அலைகடலில் அலைப்புண்டு அவதியுற்றவர்களாக நுழையவில்லை; அழகான ராஜகுமாரனும் ராஜகுமாரியுமாக நுழைந்தார்கள்.

பழங்கால அராபிய இளவரசிகளைப் போலவே தோற்றமளித்த சலீமா, சேர நாட்டுக்கே உரிய முகவெட்டோடு காணப்பட்டாள்.

முடி சூட்டிக் கொண்டபோது சேரமான் எந்தக் கோலத்தில் இருந்தாரோ—அதே கோலத்தில் இப்போது இருந்தார்.

'திகைப்பூண்டை' மிதித்தவர்கள் திகைத்து நிற்பது போல் பெருவழுதியும் எயினியும் உறங்கும் கல்லறையின் மீது உட்கார்ந்ததிலிருந்து அவர்கள் தங்களை மறந்திருந்தார்கள்.

மணிபல்லவத் தீவில் மணிமேகலை துறவிக் கோலத்தில் வரம் பெற்றாள்; ஆனால் ராஜபல்லவத் தீவில் இவர்கள் திருமணக் கோலத்தில் வரம் பெற்றார்கள்.

உள்ளே நுழைந்த அவர்களை மாணிக்கம் பதித்த இரண்டு ஆசனங்களில் அமர வைத்தது ராஜபல்லவத் தெய்வம்.

காதல் எல்லைகளைக் கடந்தது.

சென்ற காலத்தின் தொடர்ச்சியிலே அடுத்த காலத்தில் நடைபெறும் திருமணங்கள்.

கர்நாடகத்திலிருந்து சோழ நாட்டுக்கு மருமக்கள் வந்திருக்கிறார்கள்; வேங்கி நாட்டிலிருந்து வந்திருக்கிறார்கள். ஈழ நாட்டிலிருந்து பாண்டி நாட்டுக்கு மருமக்கள் வந்திருக்கிறார்கள். பாண்டிய நாட்டிலிருந்து சேர நாட்டுக்கு மருமக்கள் வந்திருக்கிறார்கள்.

—இவையெல்லாம் தெய்வம் போட்ட முடிச்சுக்களே!

சமய மார்க்கங்கள் எவையானால் என்ன, இதயத்தின் மார்க்கம் ஒன்றே.

பூஜியாளுவுக்குப் பிறகு வேறொரு காதலை விரும்ப முடியாத சேரமானும் 'சேரமானிடம் காதல் கொள்வோம்' என்பதைச் சிந்தித்தே யிராத சலீமாவும் கடலிலே விழுவானேன், கரையிலே ஒதுங்குவானேன்?

ராஜபல்லவத் தீவின் தெய்வம் ஒரு நாக தேவதை.

அராபிக் கடலில் உள்ள நூற்றுக் கணக்கான தீவுகளில் தேவதைகள் உலாவுவதாகச் சேர நாட்டு மக்கள் நம்பியிருந்தார்கள். ஆனால் சேரமான் அதைக் கேள்விப்பட்டதில்லை.

இப்போது அந்தத் தீவின் தேவதை—நாக தேவதை — ஒரு புதிய உலகத்தைக்

கண்ணதாசன்

காணும்படி அவர்களுக்கு ஆணை யிட்டான்.

உணவு வகைகள், பால் பழங்கள் எல்லாம் அந்த மண்டபத்தில் நிரம்பி யிருந்தன.

''காலம், கடல், ஊழி எவையும் உங்களைப் பிரிக்க முடியாது. 'நீங்கள் இணைய வேண்டும்' என்பதும், 'இணைந்தே மடிய வேண்டும்' என்பதும் போன பிறப்பின் விதி'' என்று கூறி விட்டுத் தெய்வம் மறைந்தது.

அழகான சப்ர மஞ்சத்தின் மீது சேரமான் பள்ளிகொண்டார். அவரது மார்பிலே சலீமா சாய்ந்தாள்.

கடல் அலை 'ஓ' வென்று இரைந்தது.

அன்றிரவு, பொழுது இனிமையாகக் கழிந்தது.

பொழுது விடிந்தபோதுதான், சேரமானும் சலீமாவும் 'பெருவழுதி—எயினி யின் கல்லறை மீது தாங்கள் உறங்கிக் கொண்டிருப்பதை' அறிந்தார்கள்.

திடுக்கிட்டு எழுந்த அவர்கள் மண லிலே நின்றதும் அவர்களுக்குத் தங்கள் நினைவுகள் மீளத் தொடங்கின.

தன் தேகத்தில் வலி இருப்பதைச் சலீமா உணர்ந்தாள்.

'இனிய கனவு கண்டு முடித்தவர்' போல் சேரமான் நின்றார்.

ஆனால் வஞ்சி நகரமும், நாராயண நம்பூதிரியும் அவர் நினைவுக்கு வந்து அவரை வியர்க்க வைத்தன.

''நாம் புறப்படுவோம்'' என்றார் அவர்.

தலைகுனிந்து அவரை ஓரக்கண்ணால் பார்த்தபடி சம்மதித்தாள் அவள்.

இருவரும் தீவின் உள்வாயில் இருந்து கரையோரமாக வந்து நின்றார்கள்.

'ஏதேனும் ஒரு படகு தட்டுப்படு கிறதா?' என்று நெற்றியிலே கையை வைத்து அங்கு மிங்கும் பார்த்தார், சேரமான்.

தூரத்தில் பரதவர் படகுகள் சில வந்து கொண்டிருந்தன.

ஓங்கி உரத்த குரலில் அவர் சத்த மிட்டார்.

அலைகள் எழுப்பிய பேரொலிக் கிடையே அவரது குரல் யாருக்கும் கேட்டதாகத் தெரியவில்லை.

வெயில் ஏறிக் கொண்டிருந்தது.

சில பரதவர் படகுகள் தன் குரல் கேட்கக் கூடிய தூரத்தில் வந்துகொண் டிருப்பதை அறிந்து சேரமான் மகிழ்ச்சி யுற்றார்; மீண்டும் ஓங்கிச் சத்தமிட்டார்.

ஒரு படகில் இருந்த பரதவர்கள், 'யாரோ இருவர் தீவில் நிற்பதை'ப் பார்த்து விட்டார்கள்.

'யாரும் போகக் கூடாத பயங்கர மான தீவு' என்று அவர்கள் கருதி யிருந்த அந்தத் தீவில், இரண்டு மனி தர்கள் நிற்பதைப் பார்த்து அவர்கள் திகைத்தார்கள்.

ஆம்! அந்தத் தீவின் கரையில் அவர்கள் எதைக் கண்டாலும், 'பேய்' அல்லது 'தேவதை' என்றுதான் கருது வார்களே தவிர, 'மனிதர்கள்' என்று கருத மாட்டார்கள்.

அந்தத் தீவைப் பற்றி அவ்வளவு கதைகளை அவர்கள் கேட்டிருக்கிறார்கள்.

இப்போதும் அவர்கள் கூர்ந்து கூர்ந்து பார்த்தார்கள்.

'ஓர் ஆடவன் கூட நிற்கிற கார ணத்தால், அது பேயாகவோ தேவதை யாகவோ இருக்க முடியாது' என்று கருதி, நாலைந்து படகுக்காரர்கள் ஒன் றாகச் சேர்ந்து தீவின் கரையை நெருங் கினார்கள்.

நெருங்க, நெருங்க அவர்கள் சந்தே கம் தீர்ந்தது.



பக்கத்தில் வந்து பார்த்தபோது, காணுமல் போன தங்கள் மன்னவரைக் கண்டார்கள்.

வஞ்சி நகரத்தில் அவர்கள் கேள்விப் பட்ட விஷயங்களுக்கும், இங்கே கண்ட காட்சிக்கும் ஒற்றுமை இருப்பதை யறிந் தார்கள்.

மன்னரின் காலில் விழுந்து வணங் கிஞர்கள் என்ருலும், 'காதலிக்காகவே மன்னவர் நாடு விட்டு வந்திருக்கிருர்' என்ற எண்ணம் அவர்களுக்கு மாற வில்லை.

அவர்களது ஐயத்தைப் போக்கு வதற்காக நடந்த நிகழ்ச்சிகளைக் கூறி ஞர், சேரமான்.

அவை உண்மையில் நடந்தவைதான் என்ருலும் அவர்கள் நம்பக் கூடியவை யாக இல்லை.

ஆனுலும், 'தாங்கள் நம்பவில்லை' என்பதை அவர்கள் காட்டிக்கொள்ள வில்லை.

ஒரு படகைச் சுத்தமாகத் துடைத்து அவர்கள் இருவரையும் அமர வைத் தார்கள்.

துடுப்பு வலித்த பரதவர்கள், இரு பொருள்பட நாடோடிப் பாடல் ஒன் றைப் பாடிக் கொண்டு வந்தார்கள்.

சேரமானுக்கு அது புரியாமலில்லை.

வஞ்சி நகரம் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறது என்பதை அதன் மூலமாக அறிய முடிந்தது.

ஆனல், 'எதையும் சந்திப்பது' என்ற ஒரு திடமான முடிவு மட்டும் அவர் நெஞ்சத்தில் இருந்தது.

'நகருக்குப் போகிருேமே' என்ற கவலையில், சலீமா ஏக்கத்தோடு அவ ரையே பார்த்துக் கொண்டிருந் தாள்.





**அட்டைப்பட விளக்கம்**

மிஸ் கிருஷ்ண குமாரி திருவனந்தபுரம் கல்லூரியில் எம்.ஏ. இலக்கியப் பட்டம் பெறப் படித்து வருகிறார். டேபிள் டென்னிஸ் ஆட்டத்தில் தேர்ச்சி உண்டு. இவ்விதழ் மேலட்டையில் 'பத்திக்' கலைப் படத்தின் அருகே அழகுபடக் காட்சி தருகிறார்.

'பத்திக்' படத்தை வரவேற்பு அறையை அழகு படுத்தச் சுவரில் மாட்டுவது வழக்கம். அதை மரச் சட்டத்தில் பொருத்தி உள்ளே இரு மின்சார பல்புகளை எரியவிட்டால் இரவு நேரத்தில் கண்ணுக்கு விருந்தளிக்கும் காட்சி.

மிஸ் கிருஷ்ண குமாரிக்குப் பின்னணியில் அழகுபட அமைந்துள்ள 'பத்திக்' சித்திரம் ஸ்ரீமதி சல்மா மிகவும் விரும்பிப் போற்றும் கலைப் பொக்கிஷம்!

வண்ணப்படம் எடுத்தவர்: சரஸ்வதி சத்தியமூர்த்தி

சேரமான் அவளருகில் மெதுவாக நெருங்கி, ''என்ன நேர்ந்தாலும் உன்னை நான் கைவிட மாட்டேன். யூஜியானுவை என்னிடமிருந்து பிரித்தது போல் உன்னை என்னிடமிருந்து பிரித்து விடமுடியாது. இது இறைவன் போட்ட முடிச்சு'' என்றார்.

சலீமா ஒரு பெருமூச்சு விட்டாள்.

'தன் மார்க்கத்தைச் சேர்ந்தவர்கள் இதை எப்படி ஒப்புக் கொள்வார்கள்?' என்ற கவலையும் அவளுக்கு இருந்தது.

அந்த நேரத்தில் சேரமான் மத வேறுபாடுகளைச் சிந்திக்கக் கூடியவராக இல்லை.

காதலைப் பற்றிய புனிதமான எண்ணம் சேரமானுக்கு இருந்தாலும், கரை நெருங்க, நெருங்க அவர் கலங்கிய நிலையில் காணப்பட்டார்.

'நகர் என்ன பேசும்?, நாராயண நம்பூதிரி என்ன நினைப்பார்? அடுத்தது என்ன?' — என்ற கேள்விகளில் அவர் ஊசலாடினார்.

கரை வந்தது.

நான்கு கால்களும் மணலில் பதிந்தன.

பரதவர்கள் கை கட்டிக்கொண்டு நின்றார்கள்.

கையிலிருந்த நவமணிக் கணையாழியைக் கழற்றி அவர்களிடம் கொடுத்தார் சேரமான்.

நகருக்குள் அவர்கள் நடக்கத் தொடங்கியபோது, அவர்கள் இருவரையும், அலங்கோலமான ஆடைகளையும் கண்ட பலர் திகைத்துப்போய் நின்றார்கள்.

சாலையிலே போய்க் கொண்டிருந்த ஒரு ரதத்தை நிறுத்தி, அதில் ஏறி அமர்ந்தார், சேரமான்.

அருகிலேயே அமர்ந்தாள், சலீமா.

அந்தச் சாலையில் நின்ற அத்தனை மக்களும் அதைக் கூடிப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அவர்களுக்கு வெட்கம் வந்தது; என்ன செய்வது?

ரதம் போய்க் கொண்டிருந்தபோது, 'யூஜியானு உறவை மறைத்ததுபோல் இந்த உறவை ஒரு நாள் மறைப்பது கூட அர்த்தமற்றது' என்ற முடிவுக்கு வந்தார் சேரமான்.

இருவரையும் சுமந்தபடியே ரதம் அரண்மனையை நோக்கிச் சென்றது.

வழக்கம் போலவே நகரில், மறுபேச்சுத் தொடங்கியது.

நகரத்து மக்கள் தங்கள் சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்து கொண்டார்கள்.

'நான் அப்போதே சொன்னேன்' என்று ஒவ்வொருவரும் சொல்லிக் கொண்டார்கள்.

சேரமானும் சலீமாவும் இறங்கி அரண்மனைக்குள் சென்றபோது, ருத்ராட்சத்தைக் கையால் பிடித்தபடி நாராயண நம்பூதிரி எதிர் கொண்டார்.

''மன்னவர் வாழ்க! தென்னாடுடைய மன்னவர் குலத்தில் இத்தகைய வரலாறு எக்காலமும் நிகழ்ந்ததில்லை. சேர நாட்டின் வரலாற்றில் புதிய புதிய விந்தைகளை உருவாக்கியவர் நீங்களே! ஆனால் சேர நாட்டுப் பூர்வீக மக்கள் வைராக்கிய சிந்தையுடையவர்கள். தங்கள் சமயத்தின் மீது விடாப்பிடியான பற்றுதல் உடையவர்கள். நெறி பிறழ்ந்த நிலையை அவர்கள் அங்கீகரிக்க மாட்டார்கள்.

''நான் உங்களிடம் விளக்கம் கோரவில்லை. விளக்கம் சொல்ல வேண்டிய அவசியமும் இல்லை. ஆனால் இந்த வழக்கில் நம்பூதிரிகள் தலைவனே நீதி தேவன்.

''என்னை மன்னிக்க வேண்டும். இந்த அரண்மனை உங்களுடையது. இங்கே நீங்கள் தாராளமாக உலாவலாம். ஆனால் அவர்களை இந்த அரண்மனை ஏற்றுக் கொள்ளாது. இது சத்தியம்'' என்றார் நம்பூதிரி கண்டிப்பான குரலில்.

(தொடரும்)

இன்னிக்கி என் இண்டர்வியூவை
எப்படித்தான் சமாளிக்கப் போறேனோ!
எனக்குக் கடுமையான தலைவலி.

நான் சொல்றதைக்
கேளுங்க, அனஸின்
சாப்பிடுங்க!

# விரைவில் நிவாரணம் பெற சக்தி வாய்ந்த, நம்பகமான அனஸின் சாப்பிடுங்கள்

**சக்தி வாய்ந்தது:** உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனஸின். ஆகையால்தான் அனஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

**நம்பகமானது:** டாக்டரின் நம்பகமான மருந்தைப் போல பல மருந்துகளின் கலவையே அனஸின். ஆகையால்தான் லட்சக்கணக்கானவர்கள் அனஸின் சாப்பிடுகிறார்கள்; சிபாரிசும் செய்கிறார்கள்.

ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவினால் ஏற்படும் வலிகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி, பல்வலி ஆகியவற்றுக்கு அனஸின் சக்திவாய்ந்த நிவாரணி.



சக்தி வாய்ந்த, நம்பகமான
**அனஸின்**

இந்தியாவின் புகழ் பெற்ற வலி–நிவாரணி

Regd. User of TM: Geoffrey Manners & Co. Ltd.

AS-5/76

# மகளிர் பகுதி

## முதல் விதவா விவாகம்!

நம் நாட்டில் முதன் முதலாக விதவா விவாகம் 1856 டிசம்பர் ஏழாம் தேதி கல்கத்தாவில் நடந்தது. ஈஸ்வர சந்திரா என்பவர் மணமகன். பால்ய விதவையாகி விட்டிருந்த காளிமதி தேவி என்ற பத்து வயதுப் பெண்தான் மணப் பெண். வடக்குக் கல்கத்தாவில் உள்ள சுகியா தெரு என்ற தெருவில்தான் கல்யாணம் நடந்தது. திருமண ஊர்வலத்தைக் காண எள்ளும் போட்டால் கீழே விழாத அளவு கூட்டம் நெரிந்தது!

—சரோஜா ராமச்சந்திரன்

## நான்தான் கொப்பரை!

நான் கேரளத்தில் அதிகமாக உற்பத்தியானாலும் என்னை அதிகமாக உபயோகிப்பவர்கள் மைசூர் மாநிலத்தவர்களே. ''ஏனம்மா, அரைத்துவிட்ட வெங்காய சாம்பார் என்றால் தேங்காய் வேண்டுமே? மழையாக இருக்கிறதே'' என்று குழந்தை சொன்னால் கவலைப்படாதீர்கள். இதோ நான் இருக்கிறேன். தேங்காய்க்குப் பதில் என்னை உபயோகியுங்கள். எவ்வளவு ருசியாகவும் இரவுவரை கெடாமலும் இருக்கும் பாருங்கள். கூட்டு வகைகள், சாம்பார், மைசூர் ரசம் எல்லாவற்றுக்கும் என்னை உபயோகியுங்கள்.

வாசனைப் பாக்கு விலை அதிகமாக இருக்கிறதே, வாங்க முடியவில்லையே என ஏங்குகிறீர்களா? நூறு கிராம் களிப் பாக்கு வாங்கி வாருங்கள். வீட்டில் அதைப் பொடி செய்து கொள்ளுங்கள். ஒரு மூடி என்னைக் கொப்பரைத் துருவியில் துருவுங்கள். இரண்டு ஏலக்காய், கிராம்பை நெய்யில் பொரித்துப் பொடி செய்துகொள்ளுங்கள். பாக்கு, தேங்காய்த் துருவல், ஏலப்பொடி எல்லாவற்றையும் கலந்து

## கரடிப் பொம்மை



உங்கள் குழந்தை ஆசையோடு வைத்துக் கொண்டு விளையாட இந்த அழகிய வழுவழுப்பான கரடிப் பொம்மை செய்து கொடுக்கவும். வாங்கித் தருவதை விட நீங்களே செய்து தந்தால் அதன் மதிப்பே அலாதிதான் அல்லவா? இந்தப் பொம்மை செய்யத் தேவையான பொருள்கள்: கால் மீட்டர் நல்ல வெல்வெட் துணி, கால் மீட்டர் ஸாடின் துணி, அரை மீட்டர் நைலான் அல்லது ஸாடின் ரிப்பன் (கால் அங்குல அகலம்)

இரண்டு சிறிய ரோஸ் கலர் நைலான் பட்டன்கள். (கண்களுக்காக). ஒரு பெரிய கறுப்பு பட்டன் (மூக்கு). பொம்மையில் அடைக்க இலவம் பஞ்சு அல்லது பழைய டன்லப் போம் துண்டுகள்.

தைக்கும் விதம்:— வரை படத்தில் காட்டியபடி அந்த அளவிற்கு முதலில் காகிதத்தில் (Paper Pattern) கத்தரித்து வைத்துக் கொள்ளவும். எல்லா பக்கமும் தைக்க இடம் விட்டுக் கத்தரிக்கவும்.

நெம்பர் 2, 4, 5, 6, 7-ன்படி ஸாடினிலும் 1, 3, 4, 6, 8 வெல்வெட்டிலும் கத்தரிக்கவும்.

நெ: .2 ஸாடினில் 1 துண்டு; நெ: 1. வெல்வெட் 2 துண்டு; நெ: 3. வெல்வெட் 2 துண்டு; நெ: 4. ஸாடின் 2 துண்டு, வெல்வெட் 2 துண்டு; நெ: 5. ஸாடின் 1 துண்டு; நெ: 6. ஸாடின் 2 துண்டு, வெல்வெட் 2 துண்டு; நெ: 7. ஸாடின் 2 துண்டு; நெ: 8. வெல்வெட் 2 துண்டு.

இரு துண்டுகள் கத்தரிக்கும் போது துணியில் நல்ல பக்கம், நல்ல பக்கத்தைப் பார்த்தோ பின் பக்கம், பின் பக்கத்தைப் பார்த்தோ வைத்து வெட்டவும். இரண்டு துண்டும் ஒரே பக்கம் பார்த்து வெட்டுவதைத் தவிர்க்கவும்.

தைக்கும் விதம்: நெ: 8. இரண்டு துண்டையும் ஒன்றோடொன்று வைத்து AE பாகத்தை விட்டு ABCDEஐ இணைத்துத் தைக்கவும். திருப்பி நன்றாகப் பஞ்சை அடைத்து AE பக்கத்தைச் சுருக்கித் தைக்கவும். நெ: 5.



சர்க்கரையோ, சிறிது டைமண்ட் கல் கண்டோ சேர்த்து டப்பாவில் பத்திரப் படுத்துங்கள். தாம்பூலம் தரிக்கும்போது பாக்கின் சுவை எப்படி இருக்கிறது? அடடா, மூக்கின் மேல் விரலை வைக்கிறீர்களா?

வாயெல்லாம் புண். என்றால் ஒன்றும் சாப்பிட முடியவில்லை என்று உங்கள் கணவர் மனம் நொந்து போகிறாரா? மூன்று வேளை என்னுடன் சிறிது கசகசாவும் சேர்த்து நன்றாக மென்று தின்னச் சொல்லுங்கள். வாய்ப்புண் ஓடிவிடும். வெல்லம் சேர்த்துப் பாயசம் வைத்துக் கொடுங்கள். வாய்ப் புண் அகன்று கணவரின் முகம் மலர்ந்திருப்பதைக் காணலாம். தோசை மிளகாய்ப் பொடியுடன் சேர்த்து இடியுங்கள். குழந்தைகளும் நன்றாகச் சுவைப்பார்கள். என்னை மாதம் கால் கிலோ வாங்கினால் கூடப் போதுமே. தினம் தேங்காயைத் தேட வேண்டாமே? தேங்காய் வாங்கிவிட்டு வீணாகிவிடும் என அவசரம் அவசரமாக உபயோகிக்க வேண்டாமே.

ஏதோ என்னை நானே விளம்பரப் படுத்திக் கொண்டு விட்டேன். குடும்பத் தலைவிகளிடம் இனியாவது நல்ல வரவேற்புக் கிடைக்குமா பார்க்கலாமே!

—விஜயா கிருஷ்ணசாமி



## ஆணைவிட அறிவாளி!

அமெரிக்க அறிஞர் திரு அட்லின் ஜான்டன் என்பவர் ஆண் பெண் இரு பாலில் யாருக்கு அதிக புத்திசாலித்தனம் உண்டு என்பதைக் கண்டு பிடித்துள்ளார். ஆண்-பெண் இருபாலாரையும் சேர்ந்த சுமார் எண்ணூறு பேர்களின் தலைமுடிகளை எடுத்து அவற்றை ரசாயனப் பரிசோதனைக்கு உட்படுத்திப் பெண்பாலின் தலைமுடிகளில்தான் துத்தநாகம், தாமிரம் ஆகியவை அதிகமாக உள்ளன என்று கண்டுபிடித்திருக்கிறார். எந்தத் தலைமுடிகளில் மேற்படி உலோகச் சத்து அதிகமாக உள்ளதோ அதற்கும் புத்திசாலித்தனத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்றும் கண்டு அறிந்து பெண்பாலரே புத்திகூர்மை உள்ளவர்கள் என்று நிரூபித்துள்ளார்.

ஆதாரம்: காரவான் - தகவல் நாகலட்சுமி

ஸாடின் துண்டை எல்லாப் பக்கமும் உள்ளே கொஞ்சம் மடித்து ஒட்டிக் கொண்டு, முகத்தில் மூக்கின் மத்தியில் துணியின் மத்திய பாகம் வரும்படி வைத்து இணைக்கவும். மூக்கிற்குக் கறுப்புப் பட்டனையும் கண்களுக்கு, ரோஸ் பட்டனையும் தைக்கவும். மூக்கிற்குக் கீழ் வாய் போல் கறுப்பு நூலால் தைக்கவும். காதுகளுக்கு நெ: 6 போல் ஒன்று ஸாடின் ஒன்று வெல்வெட் துண்டு இரண்டையும் **AC**ஐ விட்டு **ABC**யோடு தைக்கவும். திருப்பி அடைத்து **AC**ஐ மூடித் தைக்கவும். காதுகளை முகத்தில் தலைப் பக்கம் தைக்கவும். இப்பொழுது தலை ரெடி. 2 கைகளுக்கு நெ: 4 போல் 2 ஸாடினிலும் 2 வெல்வெட்டிலும் கத்தரித்துக் கொண்டு **AC**ஐ விட்டு **ABC**ஐ இணைக்கவும். திரும்பி நன்றாக அடைத்து **AC**ஐ சேர்த்துத் தைக்கவும். கால்களுக்கு நெ. 7 துண்டு ஸாடினில் இரண்டு வெட்டிக் கொண்டு எல்லாப் பக்கமும் உள்ளே கொஞ்சம் மடித்து ஒட்டிக் கொள்ளவும்.

நெ: 1 போல் 2 துண்டு வெட்டிக்கொண்டு இரண்டின் **AB** ஐயும் சேர்த்துத் தைக்கவும். பாதத்துக்கு தைத்திருக்கும் துண்டை நெ: 1ல் **CD**ஐ**EF** யோடு இணைத்த பின் வரும் துவாரத்தின் பொருத்தவும். மற்ற காதும் இதே போல் தைக்கவும். கடைசியாக நெ: 2 ஒரு துண்டு ஸாடினில் வெட்டி இதன் **D**ஐ நெ: 1ன் **B** உடனும் **B**ஐ**G** உடனும் சேர்க்கவும். இன்னொரு பக்கமும் **D**ஐ**B** உடனும் **A**ஐ**G** உடனும் தைக்கவும். திருப்பி நன்றாக அடைக்கவும். கழுத்துப் பக்க துவாரத்தை உள்ளே மடித்து




கருக்கித் தைக்கவும். தலையை இந்த இடத்தில் பொருத்தவும். கைகளையும் சாடின் பக்கம் உள்ளே இருக்கும்படி உடலில் தைக்கவும். நெ: 3 போல் 2 துண்டு வெல்வெட்டில் சேர்த்துத் தைத்து அடைத்து வாலையும் பொருத்தவும். கழுத்தில் அழகாக ரிப்பன் கட்டி விடவும்.

—சசிலா மணி

# சிரிப்புத் தேர்தல்!




''விஷயம் தெரியுமா?... நடிகை நளினமோகன வோட கணவர் கூடத் தேர்தல்லே நிக்கிறாராம்?...''

''அப்படியா? எந்தச் சின்னத்திலே நிக்கிறார்?''

''கூஜா!''

''தேர்தல் நிதிக்காக நாடகம் ஒண்ணு போட லாம்னு இருக்கேன்...''

''என்ன தலைப்பிலே?''

'' 'அகப்பட்டதைச் சுருட்டு!' ''

''அம்மா! தேர்தல்னு என்னம்மா?''

''உங்கப்பா தோத்தும் போய், டெபாஸிட்டைக் கோட்டை விடறதுக்குள்ளே நடத்தற போட்டிடா கண்ணு!''

''என்னப்பா சர்வர்! என்ன கூட்டு இது?.... வாயிலே வைக்கச் சகிக்கல்லையே!''

''அதுவா?... தேர்தல் கூட்டு சார்!''

''எலெக்ஷன்லே எந்தத் தொகுதியிலே நிக்கற துன்னே தெரியல்லே... ஒரே கவலையா இருக்கு... !''

''ஏன், எல்லாத் தொகுதியிலேருந்தும் அழைப்பு வந்திருக்கா?''

''இல்லே... எல்லாத் தொகுதியிலேருந்தும் 'நின்னு உதைப்போம்'னு கடிதம் வந்திருக்கு!...''

''உங்க கட்சி தேர்தல்லே போட்டியிடப் போறதில் லேன்னு அறிக்கை விட்டுட்டீங்களே.., தொண்டர் படை தயாராக இல்லையா, என்ன?''

''தொண்டர்படை தயார்தான், குண்டர்படை தான் ரெடியாக இல்லே!''

''நான் தேர்தலில் நிக்கிறதினாலே என் மனைவி யைப் பிறந்த வீட்டுக்கு அனுப்பிட்டேன்.''

''ஏன் அப்படி?''

''அவ இங்கே இருந்தா எனக்கு எதிராப் பிரசாரம் பண்ணுவாளேன்னுதான்!''

''எங்க தலைவர் தான் சொன்னதை அப்படியே செய்யறவர்... அதனாலே அவர் தேர்தல்லே போட்டி யிடப் போறதில்லேன்னு சொல்லிட்டார்!...''

''ஏன்? என்ன காரணம்?''

'' 'தேர்தல்லே **நிக்கறேன்**'னு சொன்னால் எலெக்ஷன் முடியற வரைக்கும் உட்காரவே கூடா துன்னு யாரோ அவரைப் பயமுறுத்தி விட்டுட் டாங்க...அதனாலேதான்!...''

**தரஜா**




வருங்காலத்தை அறிந்த இரண்டு பரிசுத்த ஆன்மாக்களின் கடைசிச் சந்திப்பு ஆதலால், ஒருவர் பற்றி மற்றொருவர் மனத்திலுள்ள குறையை எடுத்துச் சொல்லிவிடும்படி அவர்கள் மனச்சாட்சி தூண்டுகிறது. கண்ணகிக்குத் தான் இழைத்த தவறுகளுக்காக வருந்தி மன்னிப்புக் கேட்பவன் போல்,

''சிறுமுதுக் குறைவிக்குச்
சிறுமையும் செய்தேன்''

என்று கோவலன் கூறுகின்றான். இத்துடனன்றி, திரும்பவும் கடைசியாக ஒருமுறை கண்ணகியைத் தன் வாய் மணக்கப் புகழ்ந்து பேசுகின்றான்.

குடிமுதற் சுற்றமும்
குற்றிளை யோரும்;
அடியோர் பாங்கும்
ஆயமும் நீங்கி;
நாணமும் மடனும்
நல்லோர் ஏத்தும்
பேணிய கற்பும்
பெருந் துணையாக
என்னொடு போந்து
ஈங்கு என்துயர் களைந்த
பொன்னே! கொடியே!
புனைபூங் கோதாய்!
நாணின் பாவாய்!
நீள்நில விளக்கே!
கற்பின் கொழுந்தே!
பொற்பின் செல்வி!

அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற நான்கு பண்புகளையும் பெண்களுக்கு உரிமையாக்கினர் பெரியோர். அவற்றில், அச்சத்தையும் பயிர்ப்பையும் புகாரிலேயே போட்டுவிட்டாள் கண்ணகி. ஆம்; புரட்சி விளைவிக்க மதுரையை நோக்கிப் புறப்பட்டவளுக்கு அச்சமும் பயிர்ப்பும் தேவையில்லைதானே? ஆயினும், கணவனைக் கைப்பிடித்து, அவனுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றி மதுரைக்குப் புறப்பட்டாளாதலால், நாணத்தையும் மடத்தையும் நல்லோர் ஏத்தும் கற்பையும் தனக்குத் துணையாகக் கொண்டு மதுரை புகுந்தாள்.

புகாரில் முதலிரவில், பள்ளி யறையில் இருந்தபோது, தீராக் காதல் காரணமாகக் கண்ணகியின் திருமுகத்தை நோக்கிக் கோவலன் கூறிய வருணனையை ''உலவாக் கட்டுரை'' — அதாவது, ''பொருளற்ற வார்த்தைகளின் தொகுப்பு'' என்று குறை கூறினார் இளங்கோ.

இதற்கு மாறாக, மாதரி இல்லத்திலே கண்ணகியைத் தனது வலது கரத்தால் அணைத்துக் கொண்ட வண்ணம் கோவலன் கூறிய புகழுரையிலே உண்மை ஒளி வீசியது. பொருள் பொதிந்த சொற்களையே அவன் கூறினான். இப்போது அவனது இதயம் பேசுகிறது! இறுதியிலே,

''சிறடிச் சிலம்பின்
ஒன்று கொண்டு,
யான் போய்
மாறி வருவன்;
மயங்கா தொழிக''

என்றான்.

''மாறி வருவன்'' என்னும் சொற்றொடர் இருபொருள் கொண்டதாகும். ''மானுட யாக்கையோடு உன்னை விட்டுப் பிரிகிறேன். விரைவில் தேவ யாக்கையில் வந்து உன்னைச் சந்திப்பேன்'' என்று கோவலன் சொல்வதாகவும் பொருள் கொள்ள இடம் இருக்கிறது. இது மீளாப் பிரிவு என்பதனை அவனுடைய ஆன்மா அறியுந்தானே!

புகாரில் மாதவியைப் பிரிந்ததும் கண்ணகியை அடைந்து,

''சலம்புணர் கொள்கைச்
சலதியொடு ஆடி
குலந்தரு வான்பொருள்
குன்றந் தொலைந்த
இலம்பாடு நாணுத் தரும்
எனக்கு....''

என்று கோவலன் கூறியபோது ''சிலம்பு உள, கொள்ளுங்கள்'' என்றுதான் கண்ணகி கூறினாள். ஆம், தன் காற் சிலம்பு இரண்டையும் கொடுப்பதாகத்தான் கண்ணகி கூறினாள். அப்படி இருந்தும், மாதரி இல்லத்திலே கண்ணகியிடம் விடைபெற்ற கோவலன், ஒற்றைச் சிலம்பைத்தான் விற்றுவரப் புறப்பட்டான் என்பது வியப்பைத் தருவதாக இருக்கிறது.

கண்ணகி தந்த இரண்டு சிலம்புகளையும் விற்றுப் பொருள் தேடக் கோவலன் முயன்றிருப்பானானால், பொற் கொல்லன் கூட அவனைச் சந்தேகித்திருக்க மாட்டான். கதையின் போக்கே வேறு விதமாக அமைந்திருக்கும். கோவலன் ஒற்றைச் சிலம்பைக் கொண்டு சென்றதற்கு இளங்கோ சொல்லும் காரணம் விளைவினை காலம் என்பதுதான்!

கண்ணகியை விட்டுப் பிரியும் கோவலன் உறவினர்களும், பணிப் பெண்களும் இல்லாமல் அவள் தனித்திருப்பது கண்டு கலங்கினான். தன் கண்கள் துளிர்க்கும் நீரை அவள் காணா வண்ணம் அவனுடைய கண்களைத் துடைத்து விடைபெற்றுப் பிரிந்தான். (தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து.)

**ம.பொ.சி**

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

# பிறந்த 3ம் மாதம் தொடங்கும் முதல் திட உணவு குழந்தையின் வருங்கால வாழ்வையே தீர்மானிக்கத் தக்கது.

**பால் மட்டும் கொடுத்தால் போதாது என்கிறார்கள் டாக்டர்கள்**



டாக்டர்கள் சிபாரிசு செய்வது

# ஃபாரெக்ஸ்

**விரைவான முழு வளர்ச்சிக்கான சரிவிகிதச் சத்து நிரவிய திட உணவு**



பச்சிளம் தேகமும் மூளையும் வேகமாக வளரத் துடிப்பவை. அதற்கு ஈடுகொடுக்கப் பால் மட்டும் போதுமானதாகாது. தாய்ப்பாலிலிருந்து திட உணவுக்கு மாறவேண்டும்—மூன்றும் மாதமே: மென்றுதின்னப் பழக்குங்கள்... மேன்மையான வளர்ச்சிக்குத் திறவுகோலாக உதவும் திட உணவு ஃபாரெக்ஸ் ஒன்றுதான்—பச்சிளம் தீரண உறுப்புகளுக்கு உகந்தது.

**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்; காரணம்,**

தாய்ப் பால் விடுக்கும் தலையாய மாதங்களில் பாப்பாவின் பத்துவித வளர்ச்சிகளுக்கும் நிறைவுதரும் **ஒப்பற்ற சரிவிகிதச் சத்துணவு இதுவே.**

இரத்தச் செழிப்புக்கும் தெம்புக்கும் கச்சிதமான அளவுக்கு (இதுபோன்ற வேறெந்தத் திட உணவிலும் அமையாத அளவுக்கு) இரும்புச் சத்து; எலும்புக்கு உறுதியும், பல்லுக்குப் பலமும் தரும் கால்ஷியம், வைட்டமின் D2; மூளையும் உடலும் விரைந்து வளர உகந்த புரத சத்துக்கள்; வளரும் உடம்புக்குத் தேவையான சக்தி—இவ்வளவும் அடங்கியது ஃபாரெக்ஸ்; எனவே... பாலூட்டும் பழக்கத்தை மாற்றுவதற்கான வேறு எந்த திட உணவையும் விட அதிகமாக அநேகத் தாய்மார்கள் ஆதரிப்பது ஃபாரெக்ஸ். பழங்கள், காய்கறிகள், பருப்பு, இறைச்சி, முட்டை போன்ற எந்த முக்கிய உணவுடனும் கலந்து கொடுக்க இனிமையானது ஃபாரெக்ஸ். மென்றுதின்னப் பழக்க...கூடிய விரைவிலே குடும்ப உணவுகளிடம் குழந்தையை இனிதே வரவேற்க...

**அதி உன்னதமான முதல் திட உணவு ஃபாரெக்ஸ்.**

**இலவசமான எமது ஃபாரெக்ஸ் கைப் புத்தகம், 2-ரூபா தள்ளுபடித் திட்டம்—இரண்டையும் பற்றி அறிய, எழுதுங்கள்.**

(புத்தகம் எந்த மொழியில் எனக்கு குறிப்பிட்டு) உங்கள் பெயர், விலாசத்தை எழுதி, 25 பைசா தபால் வில்லையோடு அனுப்புக இம் முகவரிக்கு: தபால் பை நம்பர் 19119, பம்பாய் 400 025.




க்ளாக்ஸோ

LIL.GF. 53-140 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசிய காசு